Registered No. M. 120.

ओं.

# JNÂNA BODHINI

## A TAMIL MAGAZINE AND REVIEW

DEVOTED MAINLY TO

LITERATURE, SCIENCE, PHILOSOPHY & RELIGION

EDITORS:

M. S. PURNALINGAM PILLAI, B.A.
V. G. SURYANARAYANA SASTRI, B.A.

Vol. V. No. 6.—January, 1902.

CONTENTS.



*Madras:*

THOMPSON AND CO.,

33, POPHAM'S BROADWAY.

1902.

# ஞானபோதினி

## ஒரு மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்—திருக்குறள்.

சம்புடம் V. | 1902ஹு ஜனவரிமீ 20உ | புத்தகம் 6.

விஷயங்கள்



பத்திராதிபர் :— எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ.
வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.

சென்னை :
தாம்ஸன் கம்பெனியார்
பதிப்பிப்பது.

1902.

வருஷ சந்தா ரூ. 2-8-0 சஞ்சிகை ரூ. 0-4-0

லானவற்றை அஞ்சி, விருந்தோம்பி, யாவர்மாட்டும் இனியவைபேசி, அடக்கம் பொறுமை முதலான நல்லொழுக்கம் பொருந்தி, நன்றே தரினும் நடுவிகந்தர் மாக்கத்தை ஒழிய விடுபவனாய் இல்வாழ்வானுக்குச் செய்ந்நன்றிமறவாமை யாகிய குணமே மிகவும் ஏற்றமுடையது. முன்தான் ஒருபகாரமுஞ் செய்யாம லிருக்கத் தனக்கு இறுதிவந்த சமயத்தில் தனக்கு இன்னது செய்தால் இன்னநன்மை உண்டாகுமென் றாராயாமல் தனக்கு ஒருவன்செய்த உபகாரத் துக்குக் கைம்மாறாக வையகத்தோடு வானகத்தைச் சேர்த்துக் கொடுத்தாலும் அதற்கு ஈடாகாது. அவ்விறுதிக்கண் அவன்செய்த உபகாரம் தினையளவாயினும் தான் அதனைப் பனையளவாகப் பாவிக்கவேண்டும். மனிதன் இயற்றும் எனைப் பாவங்களுக்கெல்லாங் கழுவாய் உண்டு; செய்ந்நன்றி மறந்த பாவத்துக்கு மாத் திரம் கழுவாய் இல்லை. உதவி செய்தவர் பிரதியுபகாரம் வேண்டாமையால் உதவி பெற்றவன் செய்யலாவது பிறிதில்லை. அவர் செய்ததை மறவாமல் நினைத்திருப்பதே சாலும். அவர் ஒருகால் தனக்குத் தீங்குசெய்ய நேரினும், தான் அவர்க்குக் கேடு சூழாது அவர் செய்த உபகாரத்தையே நினைந்து அமைந்து, அத்தீமையை மாத்திரம் அப்பொழுதே மறந்துவிடுக. "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று." அங்ஙனம் மறந்து விடுதற்கு உபாயம் என்னெனின் "கொன்றன்ன வின்னா செயினும் அவர் செய்த, ஒன்று நன்றுள்ளக் கெடும்". மலைமேற் செய்த ஹிதோபதேசத்தில் "மனிதர் செய்யும் தீமையை நீங்கள் மன்னிப்பீராயின், பகவான் உங்களையும் மன்னிப்பார்" என்றுரைத்தார் **ஏசுநாதர்.** **பேகன்** என்னும் ஆங்கிலவாசி ரியர் "பழிக்குப் பழி தீர்த்துக்கொள்பவன் பகைவனோ டொத்தவன். அதைப் பாராட்டாமல் மன்னிப்பானாயின் அவனிலும் உயர்ந்தவனாவான். ஏனெனின் மன்னிப்பது இராஜகுண மாகின்றது" எனக் கூறியிருக்கின்ற னர். **ஸாமலன்** என்பவர் தமது மூதுரையில் "ஒருவன் செய்த குற்றத் தை மன்னிப்பதே ஒருவனுக்குப் பெருமையாம்" என்றனர். ஆனால் நமது வள்ளுவரோ, பிறர் செய்யும் தீமையை மன்னிக்கும்படி சொல்லாமல், அதனை அப்பொழுதே மறந்துவிடுக என்றனர். **ஏசுநாதர்** அவ்வுபதேசத் தில், "உங்கள் பகைவரை நேசியுங்கள்: உங்களைச் சபிக்கின்றவரை வாழ் த்துங்கள்: உங்களை வெறுக்கின்றவருக்கு நன்மைசெய்யுங்கள்" என்றார். நமதாசிரியரும், பொறையென்னும் அதிகாரத்தில் "மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாந்தம், தகுதியான் வென்று விடல்" என்றும், இன்னா செய்யாமை யென்னும் அதிகாரத்தில் "இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர்நாண, நன்னயஞ் செய்துவிடல்" என்றும், பண்புடைமை யென் னும் அதிகாரத்தில் "நண்பாற்றா ராகி நயனில செய்வார்க்கும், பண் பற்றா ராதல் கடை" என்றும் சான்றாண்மை யென்னும் அதிகாரத்தில் "இன் னாசெய்தார்க்கு மினியவே செய்யாக்கா லென்ன பயத்ததோ சால்பு" என்றும் பல்லிடத்தும் இவ்வுறுதியை உரைத்தனர். இங்ஙனம் இன்னா செய்தார்க்

கும் இனிய செய்யுமாறு வற்புறுத்தற்கண் எல்லாரும் ஒராறுபட்டு ஒப்பவ ராயினும், தீமையை மறந்து விடுக என்னுமிடத்தில் ஏனையரிற் சீரியராயி னுர் நமது வள்ளுவனரே. இல்வாழ்வான் ஏனை மூவர்க்குந் துணையாகி, மற்றை யில்வாழ்வார் முதலாயினுருடனே கலந்துறவாடுகையில் அனுசரித்தலான பொது லக்ஷணங்களைச் சொன்னுர் இல்லறவியலில். பொருட்பாலிற் குடியி யலில் அவ்வில்வாழ்வான் அரசியலிலே ஒருகுடியாய்க் கௌரவமான குணங் கள் பொருந்தி நல்குரவால் இரந்து இன்னலெய்தாமல் உழவுதொழிலால் தன் குடியை மேம்படுத்தும் திறத்தைக் கூறுகின்ருர். இங்கே விளக்கும் தலைமை யான குணங்கள் மூன்று, மானம், பெருமை, சான்ருண்மை என. மானமாவது எப்போதும் தமது நிலையில் தாழாமையும் அங்ஙனம் தாழ்வுவரின் உயிர் வாழா மையுமாம். ஆங்கிலத்தில் Death rather than dishonor என்பதற் கேற்பத் தமிழிலும் "மானம் பெரிதோ பிராணன் பெரிதோ'' என்ருேர் முதுமொழி வழங்கிவருகின்றது. "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னுர், உயிர்நீப்பர் மானம் வரின்'' என்ருர் வள்ளுவர். அவரவரெய்தும் பெருமைக்கு வள்ளு வனுர் ஊழ் முதலானவற்றைக் காரணமாகக் கொண்டிலர். அவரவர் பெரு மைக்கு அவரவர்களும் அவரவர்களுடைய செய்கை வேறுபாடுகளுமே கார ணம் என்பதை "ஒருமை மகளிரே போலப் பெருமையுந், தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு'' எனவும் "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப் பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்'' எனவும் உரைத்தனர். பெருமை யின் இலக்ஷணம் செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர்குற்றங் கூருமை முதலான நற்குணங்களாம். பெருமை பெரியாரதுதன்மை என்பதை "பெரு மையுடையவ ராற்றுவ ராற்றி, னருமை யுடைய செயல்'' என்றும் "பெருமை பெருமித மின்மை'' என்றும் "அற்றமறைக்கும் பெருமை'' என்றும் விளங்க வைத்தார். சான்ருண்மை யாவது பலகுணங்களானும் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மை. இவ்வதிகாரமொன்றுமே திருக்குறளின் சிரோபூஷணமாகக் கொள்ளற்பாலது, மனிதர் நல்வழிப்பட்டு மேம்பா டெய்தற்கு எடுத்துக்காட்ட லான மனிதனுடைய திறத்தை விளக்குவது இவ்வதிகாரமே யாதலின். இங் ஙனம் எடுத்துக் காட்டலான மனிதனது சால்புக்கு ஆதாரமான குணங்கள் ஐந்து. "அன்பு நாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றிய தூண்.'' இச்சால்புடைமையின் பயனுவது இன்னு செய்தார்க்கும் இனியவே செய்தலாம். "ஊழி பெயரினும் தாம்பெயரார் சன்ருண்மைக், காழி யெனப்படு வார்''.இவர்களது "பெருமை" "சான்றவர் சான்ருண்மை குன்றி னிருநிலம், தாங்காது மன்னே பொறை'' என்பதனுல் நன்கு புலப்படும். குடிகளை யோம்புதற்கு அமைச்சு முதலிய அங்கங்களுடனே அரசியற் றிப் பொருளீட்டும் அரசனைப்பற்றிச் சொல்லுமிடத்திற் கல்வி ஊக்க முடைமை - நட்பு என்றற்போல்வன பொதுத்தமை எல்லாரும் அறியத்தக்க விஷயங்களாதலிலெனக. கல்வியைப்பற்றிக் கூறுமிடத்திற் கல்வியின் பய

னைக்கூறிய "தாமின்புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்" என்னுங்குறள் மிகவும் பாராட்டற்பாலது. ஊக்கத்தின் பெருமையை "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா, ஊக்க முடையா னுழை" என்பதனால் உணரலாம். நட்பு அரசின் அங்கவியலிற் சேர்ந்ததாயினும், குடிகட்கும் இன்றியமையாச்சிறப்பிற்றாதலிற் போலும் இதனைக் குடியியலுக்கு முன்னே வைத்தது. நட்பினாலுண்டாகும் இன்பம் காமவின்பம்போல உதுகாண் எனக் காட்டலாவதொன்றன்று. சின்னீரதான காமவின்பம் போலே, நட்பினாலாயவின்பம் தேய்வதன்று, அந்நட்புப் பெரியோரிடத்துப் பொருந்துவதொன்றாகுமிடத்து. "நிறைநீர நீரவர் கேண்மைபிறை". இங்ஙனம் கற்றறிந்த பெரியோர்களுக்குள்ளே உண்டாய் நாட்குநாள் வளர்வதான நட்பின்பத்தை "நவிறொறு நூனயம்போலும் பயிறொறும் பண்புடையாளர் தொடர்பு" என உவமைமுகத்தான் விளக்கிய திறம் மிகவும் வியக்கற்பாலது. இத்திறம் அவ்விருதிறத்தையும் சுவைத்தவர்கட்கே கண்கூடாகும். இன்னோரன்ன வின்பந் தருவதாயினும் "நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு". உற்றதுரைத்த பின்னரன்று நட்பினர் ஒருவருக்கொருவர் செய்யும் உதவி: "உடுக்கையிழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவதாம் நட்பு". இந்நட்பின் சூக்ஷ்மத்தை "இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று, புனையினும் புல்லென்னும் நட்பு" என இவ்வாசிரியர் உரைத்தாங்கு வேறெவரும் உரைப்ப நான் இதுகாறுங் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. நட்பிற் பிழைபொறுத்தலைக் குறித்துப் **பேகன் (Bacon)** என்னும் ஆசிரியர், விவிலியநூலில் ஜாப் (Job) என்னும் மகான் "நாம் கடவுளிடத்தில் நன்மைபெறுமாறு போலவே தீமையைத் தானும் அமைதியுடனே ஏற்றுக்கொள்ளக் கடவேமன்றோ?" என்றுரைப்பதை மேற்கோள் காட்டி, நட்பினர் திறத்திலும் ஒருவாறு அங்ஙனமே எனக் கூறிவிட்டனர். நமது தமிழாசிரியரோ, அங்ஙனமன்றி. "பேதைமை யன்றோ பெருங்கிழமை யென்றுணர்க நோதக்க நட்டார் செயின்" என்றும், "கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு. நாளிழுக்க நட்டார் செயின்" என்றுமுரைத்தார். துறவறத்துக் கடியான அருளாவது கொல்லாமை. உண்ணற்பொருட்டு ஊனைக்கொள்வா ரிலராயின் விலைப்பொருட்டு ஊன் விற்பாரு மில்லையாவர். "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்,உயிர்செகுத் துண்ணாமை நன்று." தவநிலையில் நிற்பவராய் நடித்துக் காமவின்பத்தை விரும்பும் கூடாவொழுக்கத்தினர் புலித்தோல் போர்த்துப் பைங்கூழ்மேயும் பசுவுக்குச் சமமாவர் எனவுரைத்து, "மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்" என்றனர். இன்னவர்கள் "உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக், கள்ளத்தாற் கள்வே மெனல்." அப்பால் வாய்மை முதலாக அவாவறுத்தலீறாகத் துறவறத்துக் கொருதலையானவற்றைக் கூறுமிடத்தில் வாய்மையை மாத்திரம் சற்று ஆராய்ந்து பார்ப்போம். "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை

யெனத்தோன்றும், வாய்மையினல்லபிற". திரிகரண சுத்தியிற் பிரதானமான மனோசுத்திக்குக் காரணம் இவ்வாய்மையே". "புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை, வாய்மையாற் காணப்படும்". வாய்மைவல்லான் பிறவறங்களைச் செய்யவேண்டா. திருவள்ளுவர்க்கு "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந் தீமையிலாத சொலல்". நன்று. தமிழ்வேதமாகக் கொள்ளப்படும் இந்நூலில் அறத்துப்பாலில் துறவற வியலில் வாய்மையை வற்புறுத்து மிடத்திற் "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என இவ்வாசிரியர் எடுத்துரைத்தது ஏற்குமா? கலப்பாலில் துளிப்பிரை விட்டாற் போலே இஃது இந்நூலின் பெருமையைக் குன்றச் செய்வதன்றோ? எனின் அற்றன்று. உலகத்துக் கின்றியமையாதவற்றை இத்தனை திட்பநுட்பமுமாகக் கூறிய குரவர், இது நூலின் பெருமையைக் கெடுப்பதாக இருப்பினும், இதனால் உலகினர்க்குக் கேடுண்டாவதாக இருப்பினும், இதனை இங்ஙனம் இவ்விடத்திற் கூறியிரார். உலகினருடைய பொதுநன்மையை நாடினவர் நமதாசிரியர்: இன்னா செய்தார்க்கும் இனிய செய்யும்படி வற்புறுத்துகின்றவர். எல்லாருடைய பொது நன்மைக்கும் வாய்மையே காரணமன்றோ? அந்நன்மையானது ஏகதேசமாக ஒரோவோர் காலத்துப் பொய்ம்மையாலும் விளைவதாயின் அது மெய்ம்மையோ டொத்ததே யன்றோ? ஆகவே அப்பொய்ம்மை மெய்ம்மையின்பாலது தானே. அப்பொய்ம்மையாற் கெடுவாரின்மையின் அது தன்னெஞ்சைச் சுடுவது மில்லையே. இங்ஙனம் புரை தீர்ந்த நன்மை பயக்கும் பொய்ம்மை, மெய்ம்மையின் பாலது என்று கூறும் கருத்துப்பற்றியே போலும், 'இவர் வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந், தீமையிலாத சொலல்' என வரையறுத்துக் கொண்டது. இந்நூலில் அவ்வப்பாலில் அவ்வவ்வியலில் எவ்வெவரை நோக்கி எவ்வெவ் விஷயங்கள் கூறப்பட்டனவோ, அவ்வவ் விஷயங்கள் அவ்வவரையே நோக்கின என்பதில்லை. குடித்தனமோ துரைத்தனமோ என்பது பழமொழியாதலின், அரசர் அமைச்சர்களுக்குக் கூறியவற்றிற் பல குடியானவனுங் கொள்ளற்பாலன. குடியியலிற் கூறிய வற்றிற் பல அரசரும் அமைச்சருங் கொள்ளற்பாலன. துறவறத்திற் கூறிய புலான்மறுத்தல், வாய்மை முதலாயின ஏனை யறங்காப்பாருங் கொள்ளற் பாலனவே. மனிதன் பலவேறு நிலைமைகளிற் றழுவற்பாலனவற்றை ஆங்காங்குக் கூறியிருப்பினும், நல்லரசனுடைய நாட்டிலே இல்வாழ்வான் சான்றாண்மையுடனே குடிமையை நடத்தாநின்று இன்பநுகர்ந்து பின் துறந்து துறக்க மெய்தலே இந்நூலின் நோக்கமாதலின், ஒவ்வொருவரும் இத்தமிழ் மறையை முற்றவும் நன்கு கற்றல்வேண்டும். "கற்க கசடறக் கற்பவை கற்றபி, னிற்க வதற்குத் தக".

திருமணம்-செல்வக்கேசவராய முதலியார்.

(இன்னும் வரும்.)

# VIKRAMORVASIYAM.
## விக்கிரமோர்வசீயம்.

**அரசன்** :—(உருப்பசியை நோக்கி) அவ்விஃது பெருந்துன்பத்து ளிருக்கின்றது காண்க நீ,

தற்செய லாவெவ ளன்மைக டாங்கிய கண்வழி யின்வயின்
நிற்கலுற் றுயொரு காலேநீ நேர்ந்தக வின்னுடை யாயவள்
ஒற்கமி லாவுவப் புற்றவ ளுகுவ ளேவுனெ விட்டிவண்
நிற்க ணிறைந்த தொடர்புடை யாயம தெங்ஙன நிற்குமே. (10)

**உருப்பசி** :—(தன்னுள்) இவரது மொழி தகைமையானதே; இல்லாவிடின் சந்திரனின்றும் அமுதமெனின் அங்கு இறும்பூ தென்னே?

(விளக்கம்) :—ஆகையாற்றான் இதைப்பார்க்க என்மனம் விரைகின்றது.

**அரசன்** :—(கையாற் காட்டிக்கொண்டு.)

மின்னுடலாய் பொற்கூட மேவுமிந்தத் தோழியர்கள்
மன்லியகோ ணீங்கியவெண் மாமதிநேர்—உன்முகத்தை
மீண்டுவந்த தற்குரிமை மேவுபிர சாதமதாக்
காண்டலுறு கின்றனர்கள் காண். (11)

(உருப்பசி அரசனைக் காதலோடு நோக்குகின்றனள்.)

**சித்திரலேகை** :—தோழி! என்ன பார்க்கப்படுகின்றது?

**உருப்பசி** :—இன்பதுன்பங்களை யொப்பநாடுவதா மிச்சனம்.

**சித்திரலேகை** :—(சிரிப்போடு) அடி! எது?

**உருப்பசி** :—நட்புச்சனம்.

**அரம்பை** :—(களிப்போடு) தோழிகாள்! இவ்வரசமுனிவர், சித்திரலேகையைத் துணைவியாகக்கொண்ட இன்றோழியைக் கைக்கொண்டு விசாகை மீனுடன் கூடிய கடவுட்சந்திரன்போற் கிட்டினர்.

**மேனகை** :—(கண்டு) இவ்வின்றோழியு மீட்டுக்கொணரப் பட்டனள்; இவரும் புண்படாவுடலினர்; என்ற இரண்டும் நமக்கு இனியனவாகவே அமைந்துள்ளன.

**சகசனியை** :—நன்கு மொழிகின்றனை; வெலற்கரியரன்றோ அசுரர்கள்.

**அரசன்** :—பாக! இஃது அக்குன்றக் கவடு; தேரினையிறக்கு.

**பாகன்** :—எது கட்டளையிடுகின்றனனோ ஆயுளாளன்.

(என்று சொன்னவண்ணஞ் செய்கின்றான்)

**அரசன்**.—(சக்காத்தி னசைவைத் தோற்றுவித்துக் கொண்டு தன்னுள்) அந்தோ! பயனுடைத்து எனது சிற்றின்பத்திறக்கம்,

தேரசைவா லிப்புயந்தான் றேர்விகர்த்த வல்குலினுள்
ஏரமைந்த நற்புயத்தோ டேயிடித்து—நேரியைந்த
வன்ன மயிர்ப்புளகம் வாய்ந்திருப்ப தங்கமிலான்
முன்னமுளைத் திட்டதுபோன் மோ. (12)

**உருப்பசி.**—(நாணத்தோடு) சிறிது முன்னே செல்.

**சித்திரலேகை.**—(சிரிப்போடு) யான் வலியற்றவள்.

**அரம்பை.**—இங்கு அரசமுனிவரைப் பூசிக்கின்றேம்.

(நெருங்குகின்றனர்கள்.)

**அரசன்.**—பாக ! தேரினை நிறுத்து காண்.

ஆசை வாய்ந்தவ ளாகுமிந் நன்னுதல்
ஆசை வாய்ந்திடு தோழிய ரோடவண்
ஏச றுங்கொடி யோடிரு துத்திரு
வீசி மேவலின் மேவுறு மீண்டுமே. (13)

(பாகன் அவ்வாறு செய்கின்றான்.)

**எல்லோரும் :**—அம்ம ! மகாராசர் வெற்றியினுல் வளர்கின்றீனர்.

**அரசன் :**—நீவிருந் தோழியின் சேர்க்கையால்.

**உருப்பசி :**—(சித்திரலேகையாற் பற்றுண்ட கையினளாய்த் தேரினின் றிழிந்து) தோழிகாள் ! என்னைத் திடமுறக் கட்டிக்கொண்மின் ; நட்புச்சனத்தை மீண்டுங் காண்பே னென்னு மாசை எனக்கில்லா திருந்ததன்றே ?

(யாவரும் மிக்க விரைவினராய்க் கட்டிக்கொள்கின்றனர்.)

**அரம்பை :**—எவ்வாற்றானும் மகாராசர் பல்லாயிர மாண்டு காசினியைக் காத்துவருக.

**பாகன் :**—ஆயுளாள ! கீழைத் திசையில் தேரினது பெருவேகத்தால் ஒலி காட்டப்பட்டது.

உருக்கிய வாடகத் துற்ற தோள்வளை
தரித்திடு மீங்கிவ ளெருத்த னுந்தடித்
திருத்திய வாரிதம் போல வேயினி
திருக்குமிந் நாகமீ திழிகின் றனரோ. (14)

(காண்கின்றனர்கள் அச்சரமாதர்கள்.)

**அச்சர மாதர்கள் :**—அகோ ! சித்திரரதன்.

(பின்பு புகுகின்றனன் சித்திரரதன்.)

**சித்திரரதன்.**—(அரசற்கெதிர் முகமாக நின்று) ஓ ! மகேந்திரனுதவி யளவினதாய வல்லமை மேன்மையால் வளர்கின்றனை நீ.

**அரசன்.**—(தன்னுள்) அடே! கந்தருவ வேந்தன்.

(விளக்கம்).—இனியநண்ப! நல்வரவா?

(தேரினின்றிழிந்து இருவரும் ஒருவர்க்கொருவர் கைபிடித்துக் கொள்ளுகின்றனர்.)

**சித்திராதன்.**—நண்ப! கேசி உருப்பசியைத் தூக்கிக்கொண்டுபோய் விட்டதாக நாரதர் சொல்லக்கேட்டு இவளை மீட்டுக் கொணர்கைக்குக் கந்திருவ சேனை இந்திரனாலேவப்பட்டது; பிறகு யாம் நினது வெற்றியின் மேன்மையை இடையிற் சாரணர்கூட்டங் கூறச் செவியேற்று இங்கிருக்கும் உன்னைக் காண்பான் வந்தனம்; அந்த நீ இவளை முன்னிட்டுக் கொண்டு எம்மோடுகூட வானவர் கோனைக் காணற்குரியை; இந்திரனுக்குப் பேரிட்டஞ் செய்யப்பட்டதன்றே. காண்! காண்!!

நாரணனுன் முன்னமிவ ணன்குபடைக் கப்பட்டாள்
காரணவும் வாகனனூர் காரண்மா—நேரணைந்த
மித்திரனு முன்னாலே மீட்டமரர் தம்பகைவன்
கைத்தலத்தி னின்றுமிவண் காண். (15)

**அரசன்.**—வேண்டா மிவ்வாறு.

எதிர்வன் பாங்கி னோர்க ளியற்பகை சயிக்கின் றார்கள்
இதுகையிற் குலிசத் தோன்ற லேற்றவல் லமையே யன்றோ
குதரவன் முழையி னின்றுங் கொடியபஞ் சான னத்தின்
எதிரொலி யதுவு மோடி யினக்கயம் பிளக்கு மன்றோ. (16)

**சித்திராதன்**:—இது தக்கதுதான்; தருக்கின்மையன்றோ வல்லமைக்கணி.

**அரசன்**:—நண்ப! சதமகனைக்காண இது சமயமன்று: ஆகையால் நீயே அங்கிவளைக் கோன் மருங்கணைவி.

**சித்திராதன்**:—நீ எங்ஙனம் நினைகின்றனையோ. நீவிர் இங்கே இங்கே.

(அச்சரமாதர்கள் புறப்பட்டனர்.)

**உருப்பசி**:—(ஏகாந்தத்தில்) அடி! சித்திரலேகை! உதவிசெய்த அரசமுனிவரை விடைகேட்க வலியற்றவளாகின்றேன்; நீ எனக்கு முகமாயிரு.

**சித்திரலேகை**:—(அரசனைக்கிட்டி) ஓ! நண்பரே! 'மகாராசரது கீர்த்தியைப் போல் தன்னை மகேந்திர லோகமடைவிக்கைக்கு மகாராசர் விடைதர வேண்டுகின்றேன்' என்று உருப்பசி விண்ணப்பிக்கின்றனள்,

**அரசன்**:—போகலாம் மீட்டுங் காண்கைக்கு.

(எல்லோரும் கந்தருவரோடே வானத்தெழும்புதலைத் தோற்றுவிக்கின்றனர்கள்.)

**உருப்பசி**:—(எழும்புதலின் தடையைத் தோற்றுவித்து) அய்கோ! கொடிக்கிளையில் எனது ஒற்றைச்சர முத்துமாலை பற்றிக்கொண்டது.

(கபடத்தோடு திரும்பி அரசனைப் பார்த்தவளாய்) சித்திரலேகை ! இதை விடுவிகாண்.

**சித்திரலேகை** :—அறப்பற்றிக் கொண்டதன்றோ ; விடுவித்தற் கரிதென்றே எனக்குத் தோற்றுகின்றது ; இருக்கட்டும் ; இதை விடுவிப்பேன்காண்.

**உருப்பசி** :—(சிரிப்போடு) தோழி ! சனது சொல்லினை மறவேல்.

(சித்திரலேகை விடுவிக்கின்றனள்)

**அரசன்** :—ஆ !

இவள்செலவுக் குக்கணப்போ திங்கிடையூ றேற்ற
தவழ்கொடியே யெற்குநலஞ் செய்தாய்—இவள் திருப்பப்
பட்டவரை யாமுகத்தாள் கட்கடையி னுள்பார்க்கப்
பட்டனளின் றென்னாலே பார். (17)

**பாகன்** :—

இந்தி ரன்வயிற் றீமைசெய் தேய்ந்ததா னவரை
வந்து வர்க்கடல் வீழ்த்தியிவ் வாயுவின் படையின்
சந்த வம்புசேர் தூணியைச் சார்ந்தது மீண்டும்
தந்த நஞ்சுகா லரவுதன் னளைதனைப் போல. (18)

**அரசன்** :—தேரினைச் சித்தப் படுத்து ஏறுவதற்குள்.

**பாகன்** :—அப்படியே.

(என்று தேரினைச் சித்தஞ் செய்கின்றனன் ; அரசன் காட்டியபடியே தோ டேறுகின்றான்; உருப்பசி பெருமூச்செறிப்போடு வேந்தனைப் பார்த்துக்கொண்டே தோழிகளோடு அகன்றனள்.)

**அரசன்** :—(உருப்பசி வழிமேல் வைத்த முகத்தினனாய்) அகோ ! கிடைத்தற் கரியதைக் காதலித்த தன்றோ எனது விருப்பம்.

இச்சுர மங்கை தந்தை யிடைப்பதத் தேறு வானொன்
னச்சிர மாய மெய்யி னகத்தினை வலிய வாக
நச்சுறு நளினத் தேய்ந்த தலையறு நாள நூலை
மச்சுறு மரச வன்னப் பெடையென விழுக்கின் றுளால். (19)

(என்ன எல்லோரும் அகன்றனர்.)

**முதலங்கம் முற்றிற்று.**

பு. மா. ஸ்ரீநிவாசாசாரியர்.

# THE PHILOSOPHY OF RAMAYANA.
# இராமாயணத்தின் தத்துவபோதம்.

---

நம் தேசத்தில் ஆஸ்திகர்களா யிருப்பவ ரனைவரும் இராமாயணத்தை மிக மேலான கிரந்தமாகக் கருதுவதும் அதன்மீது ஒப்பற்ற மரியாதையையும் கௌரவத்தையும் பாராட்டி அதற்குத் தலை வணங்குவதும் நாம் நன்கறிந்த விஷயம்; அதன் மகிமை அளவற்றதெனப் பலருங் கொண்டாடுகிறார்களென்பதற்கு அது வேதமெனப்படுவதே போதுமான சான்றாகும். இராமாயணத்தைப் படிப்பதனால் அடையும் பேறு மிக்க அற்புதமானது என்றும் இப்பாரத வருஷத்திலுள்ள ஆரியர்களில் அவரவர் அவாந்தர மதபேதங்களும் அவரவர் ஆசார அபிமானங்களும் பலவாறாக அமைந்திருப்பினும் அவர்களில் ஒவ்வொருவரும் சரியாகவோ சரியின்றியோ இராமாயணம் மற்ற எந்த நூலிலும் சிறப்பு வாய்ந்ததென்றும் அங்கீகரிப்பதை நாம் ஆக்ஷேபிக்க வல்லேமல்லேம். அவ்வொவ்வொருவரும் ஸ்மார்த்தராயினும், வைணவராயினும், மாத்வராயினும் இராமாயணத்தின் தெய்வத் தன்மையை ஐயமின்றிக் கருத்திற்கொள்வதும், அதுவே மேலான சன்மார்க்கத்தின் விதிகளையுடையதென்றும் உயர்ந்த தருமங்களை நடத்திக்காட்டும் தந்திரமென்றும் அதனைக் கைக்கொள்வதும் நாம் தெளிவாயறிந்த விஷயம். நம்முட் சிறந்த நூல்கள் பலவுளவாயினும் அவற்றுள் இராமாயணத்திற்கு இத்துணைச் சிறப்புரைப்பதற்குக் காரணம் யாதென்று வினவ நூல்களை உய்த்துணர்வோர் ஒவ்வொருவர் மனத்தினுந் தோன்றலாம்.

அஃது ஒரு தேசசரித்திரம் என்பதனாலோ? ஓர் உத்தம புருஷனுடைய வரலாறென்பதனாலோ? மானுடர் இவ்வாறு நடக்கவேண்டியதென்ற உயர்ந்த தர்மங்களை உபதேசிக்கின்றதனாலோ? சுலபமும் ருசியுமான கீர்வாண நடையில் இயற்றப்பட்டுச் சொற்சுவை பொருட்சுவை அலங்காரம் முதலியன நிரம்பியிருக்கின்றதனாலோ? அல்லது அந்நூலின் கதாநாயகன் சர்வக்ஞனது அவதாரமென்பதனாலோ? எக்காரணத்தால் அஃது இத்தகைய மாண்பினைப் பெற்றது? மேற்கூறிய எல்லாச் சிறப்புக்களும் ஒருங்கு வாய்ந்திருப்பினும் இந்நூல் மற்றெந்நூலினும் சிறப்பு வாய்ந்தது என்பதற்கு அவையே போதுமான காரணங்களாகுமோ? பல்வகை அறங்களையும் வித்தைகளையும் விவரித்துரைக்கும் ஸ்காந்தமும், மெய்யறிவுணர்த்துதற் கென்றே அமைந்த பாகவதம் விஷ்ணுபுராணம் முதலிய சிறப்புற்ற கிரந்தங்களும் மேற்கூறிய சிறப்பு மாத்திரமன்றி ஈசுவர அவதாரங்களையும் ஈவரப் பிரத்தியக்ஷத் தோற்றத்தினையும் கூறுகின்றன. அவைகட்குப் புராணமென்று பெயரிட்டு, இராமாயணத்துக்கு விசேஷார்த்தமுள்ள இதிகாசமென்ற நாமமளிக்கக்காரண மென்னை? இராமயணத்தை வேதமாகக் கருதக்காரண முளதெனில் மெய்யறிவைப்

பயக்க வல்லதாயும் மனிதர்களின் அறிவுக்கு மேலான பயனுயு மிருக்கின்ற "உபநிஷதவித்தை" இராமாயணத்தில் எங்கிருக்கின்றது? வேதமே இராமாயணமெனக் கொள்வதற்கு ஈசுவரனே மானுடருள் ஒருவனுக வந்தானென்பதும் மனிதர்களைப்போல் அவனும் வருந்தினனென்பதும் அவன் ஒரு மனிதனுகவே இருந்து தன்னுடைய பராக்கிரமத்தினுலும் அறிவினுலும் பிறருக்குதவி புரிந்தானென்பதும் போதுமான காரணங்களாகுமா? சாதாரணமாய்ப் புண்ணிய மென்றும் பாவமென்றும் இன்னவை நல்லவை இன்னவை தீயவை யென்றும் உரைக்கும் கதைகளும், ஞானிகளுடையவும் அரக்கர்களுடையவும் தன்மையை விவரிக்கும் வரலாறுகளும் மனிதனுடைய ஆத்ம லாபத்தைப் பயக்கக் கூடியனவா வென்பதும் அவனுடைய வாஸ்தவ சுபாவம் இன்னதென வுணர்த்தி முன்னர் அவன் இவ்வாறு இருந்தா னென்றும் பின்னர் இத்தகையவன் ஆவா னென்றும் குறித்துக் காட்டும் இயல்பை யுடையனவா வென்பதும் அனைவரும் சந்தேகமுறக் கூடியவை யல்லவா? ஆனுல் இராமாயணத்தில் மறை பொருளாக வேதாந்தத்தத்துவார்த்தம் அடங்கி யிருக்கிற தென்றும் வெளிப்படையாகச் சாதாரணமான கதைகளை இராமாயணம் உரைப்பதாயினும் அக்கதைகள் அதன் முக்கியமான கருத்தென்று கொள்ளாமல் மறைந்திருக்கும் தத்துவார்த்தத்தையே ஒவ்வொருவரும் ஆராய்ந்தறிய வேண்டிய தென்றும் அந்தத் தத்துவப் பொருளின்ன தென்றும் வெளிப்படையான கதைகளின் பிரயோசனம் இன்னதென்றும் நாம் விவரிக்க வேண்டியது மவசியம். இராமாயணத்தில் தர்மம், மதம், சரித்திரம் முதலியவைகட் குரிய விதிகள் நிரம்பியிருக்க அவ்விதிகளுக்குக் குறை வின்றியும் அவைகளை விவரிக்கும் வசனங்களையே ஆதாரமாகக் கொண்டும் அவற்றுள் அடங்கியிருக்கும் தத்துவார்த்தத்தை விவரிப்பது உசிதமே யல்லாது அவ்விதிகளுக்கு இடையூருக வாவது வசனங்களுக்குப் புறம்பேசென்ருவது சம்பந்த மில்லாத ஓர் அர்த்தத்தைக்கற்பிப்பது உசிதமன்று. அப்படிக் கற்பிக்கப்படும் பொருள் நிராதாரமாக இருக்குமாகையால் அஃது ஒருவராலும் அங்கீகரிக்கப் படவுமாட்டாது. **பிரபோத சந்திரோதய** முதலிய சிறு நூல்கள் மறைபொருளாக ஓர் அர்த்தத்தையும் வெளிப்படையாக மற்ரோர் அர்த்தத்தையும் விவரிக்குமாறு இராமாயணமும் அவ்வாறே இருபொருளை யுடையதென்றும் அதில் மறைந்திருக்கும் பொருளானது பரமவேதாந்தத்தைதயே குறிக்கிற தென்றும் நாம் கருதுகின்றனம். அந்த இரகசியார்த்தம் யாதெனில்:—

இராமாயணம் ஏழு காண்டங்களாக அமைக்கப்பட்டிருப்பதுடன் காயித்திரி மந்திரத்தின் இருபத்து நான்கு அக்ஷரங்களில் ஒவ்வோர் அக்ஷரத்திற்கு ஆயிரம் சுலோகங்களாக இருபத்து நாலாயிரம் சுலோகங்கள் இராமாயணத்தில அடங்கியிருக்கின்றன வென்பதும் மேலோர்களாற் கூறப்படுகின்றது. இதுநிற்க. "அவவ்வாயவ்யாயநிரதம்" என்று காயித்திரியின் முதலக்ஷர

மாகிய 'த' கரத்தில் ஆரம்பித்து, "யாமேவோதி॰ ஸதாவம்" என்று காயித்திரியின் கடைசியெழுத்தாகிய "ய" கரத்தில் முற்றுப்பெற இராமாயணமானது இயற்றப்பட்டிருக்கின்றதை நாம் அறிகின்றோம். இராமன் அவதரித்த குலம் சூரியவம்சம் என்றும் அகஸ்தியமா முனிவருடைய உபதேசத்தின்பேரிற் சூரியனைப் பூஜித்து இராமன் வெற்றிபெற்றானென்றும் புகன்று இராமாயணத்திற் சூரியனுடைய மான்மியமானது உரைக்கப்படுகின்றது. இராமன் அவதரித்த குலத்துக்கு வசிஷ்டமாமுனிவர் ஆசாரியரென்றும் இராமனுடைய இளமைப்பருவத்தில் "பலை" "அதிபலை" யென்ற இரண்டுவித்தைகளை அவனுக்குபதேசித்துச் சீதாபிராட்டியை அவனுக்கு விவாகஞ் செய்வித்தவர் விசுவாமித்திர முனிவரென்றும் சொல்லி அவ்விரண்டு முனிவர்களுடைய பெருமைகளையும் இராமாயணம் ஒருவாறு விளக்கிக் காட்டுகின்றது. இவைகளுக்குக் காரணம் விசாரிக்குங் காலத்திலும் 'ஓ॰ தவஸாய ॰ாய நிரதம்' என்று பிரணவமந்திரமாகிய ஓங்காரத்தை முதலாக்கூறி இராமாயணத்தைப் படிக்கின்றதை யோசிக்குமிடத்தினும் "வொவெஷாவெஉ ஸஃவெ॰ாகூஃ" என்று ஓங்காரத்தை வேதத்திற் காதியாச் சொல்லுகிற வேதவசனத்தை யனுசரித்து யாம் அடியிற் கண்டவாறு கருதுகின்றோம். பிரணவமந்திரத்துக்கு அங்கங்களாக ஹூஃ, ஹுவஃ, ஸூஃ, உஹஃ, ஜநஃ, தவஃ, ஸத்॰ம், என்று ஏழு வியாகிருதிகள் ஏற்பட்டிருக்கின்றமையால் ஒவ்வொரு வியாகிருதிக்கும் ஒரு காண்டமாக இராமாயணத்திற்கு ஏழு காண்டங்கள் அமைக்கப்பட்டன வென்றும் அந்த ஏழு வியாகிருதிகளுக்கும் அத்திரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கீரஸர் என்று ஏழு ருஷிகள் ஏற்பட்டிருந்தும் அவ்வேழு வியாகிருதிகளுக்குள் மத்திய வியாகிருதியும் 'ாஹ உதிதஸ்வ॰ ஹஸகூ' என்கிறபடி பிரம சுவரூபத்தையே குறிக்கின்றதுமாகிய வியாகிருதியின் ருஷியாகிய வசிஷ்ட மகா முனிவரைக் குலாசாரியராகச் சொல்லப்பட்டிருக்கிறதென்றும் நாம் கொள்ளலாம். வியாகிருதிகள் ஏழனையுங்கொண்டு காண்டங்கள் ஏழனையும் ஏழு ருஷிகளுக்குள் முக்கியரான வசிஷ்ட்ராகவும் அமைப்பதற்குமுன் "வ॰ணவஸ॰ ஜீஷி வ॰ஹா" என்று சொல்லப்படுகிறபடி சதுர்முகனே வியாகிருதிகளின் அங்கியாகிய பிரணவமந்திரத்துக்கு ருஷியாயும் மகாவியாகிருதிக்கு அவரே தேவதையாகவு மிருத்தலால் அவர் தாம் இராமாயணக்கதையை வால்மீகி முனிவருக்கு உரைத்து, சரித்திரம் நடந்தபடியே பார்க்க அம்முனிவருக்கு அநுக்கிரகித்ததாகவும் சொல்லப்படுகிறது. இவ்விதமாக இராமாயணத்தின் உற்பத்தியும் அதன் ஸ்தூல ரூபமான ஏழு காண்டங்களின் அமைப்பும் ஏற்பட்டபின் பிரணவமே சாவித்திரியாக விஸ்தரித்தமையால் சாவித்திரியின் இரு

பத்து நான்கு எழுத்துக்களைக் கொண்டு எழுகாண்டங்களுள் அடங்கிய இருபத்துநாலாயிரம் சுலோகங்களும் அமைக்கப்பட்டன. சாவித்திரிக்கு ருஷி விசுவாமித்திர ரென்றும் அதற்கு தேவதை ஆதித்திய னென்றும் நாம் தெரிந்திருக்கிறோம். அதற்கு அநு குணமாகவே இராமாயணத்தின் தொடக்கத்தில் விசுவாமித்திர முனிவரின் வரவையும் இராமாயணத்தின் முக்கிய இடமாகிய இராவண வதகாலத்தில் ஆதித்தனுடைய அநுக்கிரகத்தை நாம்பார்க்கிறோம். "[illegible]" என்று சாவித்திரியானது ஆதித்தனுடைய தேஜஸையே வற்புறுத்தி உணர்த்துகின்றதென்றும், இராமாயண சுலோகங்கள் சாவித்திரியின் அக்ஷரங்களால் தொடங்கி அமைக்கப்பட்டன வென்றும் நாம் நன்கு அறிகிறோம். சாதாரணமாக ஒவ்வொரு மந்திரத்துக்கும் ரூபம், சந்தஸ், தேவதை ருஷி என்று நான்கு அம்சங்களுள்ளன. இராமாயண மந்திரத்தை அடியிற் கண்டபடி நான்கு விதங்களாகப் பார்க்கின் அதன் அம்சங்களும் நான்கு விதங்களாக வேறுபடுகின்றன.

| ரூபம். | சந்தஸ். | தேவதை. | ருஷி. |
|---|---|---|---|
| 1. சமஷ்டிப்பிரணவம் அல்லது ஓங்காரமாக | தேவிகாயத்திரீ சந்தஸ் | பரபிரம்மம் | சதுர்முகன். |
| 2. வியஷ்டிப் பிரணவம் அல்லது எழுவியாகிருதிகளாக. | காயத்திரி முதலிய எழு சந்தசுகள். | 1. சதுர்முகன் முக்கியன். | 2. வசிஷ்டன் முக்கியன். |
| 3. சாவித்திரி. | நிஜத் காயத்திரீ சந்தஸ். | சூரியன். | விசுவாமித்திரன் |
| 4. இராமாயணம். | அநுஷ்டுப் முதலிய சந்தஸுகள். | இராமன். | குசலவர்கள். |

இவ்வாறு இராமாயணத்தை வேதங்களுக்கு வித்தாகிய சமஷ்டிப் பிரணவமாகப் பார்த்தால் அதன் தேவதை நிர்க்குணப் பிரம்மமென்றும், அதன் ருஷி சதுர்முகனென்றும், வியஷ்டிப் பிரணவமாகப் பார்த்தால் அதன் தேவதை சகுணப் பிரம்மமாகிய ஹிரண்ய கர்ப்பனென்றும், ருஷி வசிஷ்டனென்றும், சாவித்திரியாகப் பார்த்தால் அதன் தேவதை சூரியனென்றும், ருஷி விசுவாமித்திர னென்றும், இராமாயணமாகவே பார்த்தால் அதன் தேவதை இராமனென்றும் இராமாயணத்தை உபாசித்த ருஷிகள் குசலவர்களென்றும் தெள்ளிதிற்புலப்படும். ஆகையாற் சூரியனே இராமன் சகுணப்பிரம்மமும் இராமன் நிர்க்குணப்பிரம்மமும் இராமனன்றி வேறில்லை. வேதங்களும் சமஷ்டிப் பிரணவமாகிய ஓங்காரத்தினின் றெழுந்து பிரணவத்துக்கு எழுவித வியாகிருதிகள் ஏற்பட்டனபோல் வேதங்களும் எழுகாண்டங்களாக அமைந்து சாவித்திரி மந்திரமே அவைகளில் நிரம்பி யிருக்கின்றது, அவ்வாறே இராமாயணமும்

(1) அக்கினி, வாயு, அர்க்கன், வாகீசன் முதலிய ஏழுபேர்களில் வாகீசனாகிய சதுர்முகன் மஹஃ வியாகிருதிக்கு தேவதை. (2) அவ்வாறே 'மஹஃ' வியாகிருதிக்கு வசிஷ்டன் ருஷி.

அமைக்கப்பட்டமையால் வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே । வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா ॥ என்றபடி இராமாயணத்தைப் பிரத்தியக்ஷ வேதமென்றே சொல்வது பொருந்தும். இது நிற்க, "ஸூர்யாவச்சிந்நசைதந்யம் ப்ரஹ்ம இதி" என்னும் வசனத்தால் பரப்பிரம்மத்தைச் சூரியாவச்சின்னமாகப் பார்ப்பதாலும் பரப்பிரம்மத்துக்கும் பரப்பிரம்மஅவச்சேதகமாகிய சூரியனுக்கும், சூரியாவச்சேதகமாகிய இராமனுக்கும் பேதமில்லாமைபற்றி இராமனைச் சூரிய குலத்திற் பிறந்தாரென்ப போலும். இவ்விதமாக வேதமே இராமாயணமாயின், பரப்பிரம்மமே இராமனுயின் பரப்பிரம்ம வித்தையாகிய உபநிடதத்தின் சாரம் இராமாயணத்தில் எங்கு விளங்குகின்றதென்னும் வினு மிக்க உசிதமானது. பின்னர்க் கூறுவனவே அவ்வினுவுக்கு விடையாகும்.

(இன்னும் வரும்)

பி. எஸ். சுப்பிரமணிய ஐயர்.

---

## NECTAR OF HISTORIC CURIOSITIES.
## சரித்திர விநோதாமிர்தம்.

---

### "வனப்பினில் வென்ற வேந்தை" என்ற கவியின் ஆட்சேபசமாதானம்.

பின்னரும் ஒரு பாரிய சூரியார்,

"வனப்பினில் வென்ற வேந்தை வயங்கொளுங் கால மென்னுங்
கனைந்துவண் டிவருங் கூந்தல் கருதிய விலக்கந் தப்பாத்
தனிப்படை யாக வேறற் கெண்ணினன் றரளஞ் சிந்தக்
குனிக்குமென் கரும்பான் மேரு வில்லியை வெல்லுங் கோளான்"

என்ற செய்யுளைப் பற்றிக்கொண்டு, அதிலே "தரளஞ்சிந்தக் குனிக்குமென் கரும்பான்" என்றவதனை உதாத்த சத்தமாய்ப் பலதடவை வற்புறுத்திய படியே யோதிக்காட்டி, இஃதென்னை? வில்லைக் குனிக்கையில், தரளஞ்சிந்தில், கணுக்கள் தெறித்தனவாகவாகி, ஒடிந்த வில்லாமன்றோ? அன்றியும் "மென்கரும்பு" வில்லென விசைந்தபடியாவது? கொழுந்தாடைக் கரும்பே யோ? என்றூர். அப்போது இவ்வேழையும்,*

* ஏழை - என்றது அதிவீரராம பாண்டியரின் பத்தினியாராகிய மதன லீலையார். இவர் அவ்வரசரின் காமக்கிழத்தியராகிய பொற்கொடியாரை ஆண் வேடந்தரிக்கச் செய்து, தாமும் ஷை பாண்டியரேயென்ன அவருடையாதிய வற்றூல் வேடந்தாங்கி அவருத்திரவின்படி சிவாலயமொன்றில் "நைடதத்தை" அரங்கேற்றிய தன்மையைத் தம் பத்தாவோடு கூறுங் கூற்றினோர்பாக மிது வென்க.

" காணுமல் வேண்டுமெலாங் கத்தலாங் கற்றோர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே—நாணுமற்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்காற்
கீச்சுக்கீச் சென்னுங் கிளி"

என்றபடி, அவ்விடந்தாமில்லாததால், பலபல பேசுபவளாகி, "ஆளை ஆள் குத்தும் - ஆள்மிடுக்குப் பத்துப்பேரைக் குத்தும்" என்பதுபோல் தேவரீருடையாதியவற்றால் தம்மிடுக்காளாகி, அவரை அவ்வழியே யடக்கத் தீர்மானித்து, "அந்தணர் வீட்டிற் சந்தனமணக்கும்" "பூவொடு சேர்ந்த நாரு மணக்கும்" என்றவாறு தேவரீரைச் சார்ந்ததனால் தம்மிட மிருந்துண்டான வாக்காதிய வல்லபாதிகளில், "கருவையுருவறியான் - கண்டாரைப் பேரறியான்" என்ற நிலையினின்ற வெனக்குங் கிஞ்சித்துண்டானதாக,—"குப்பையில் முளைத்தகொடி - கூரையேறினதுபோல" வெனத் தாமிருக்குமாசனங் கிடைத்த பெருமையால், "எதிர்த்தும்ம லெடுத்துக்கொடுக்கும்" என்றதை யநுசரித்து வினவிய வித்துவான் தும்மியதூயநன்னிமித்தமுஞ் சேரப், - பொற்கொடியிடந் துடிக்கின்றதென, அடுத்த வரன்கோவிற் காலபூசைக் காண்டமொலிக்க, "சபையிலே நக்கீரன் - சண்டையிலே சவியசாசி" என்ற தன்மையிலாகி, எனது முதற்றெய்வத்தை முன்னிட்டு, அவரை நோக்கி, ஐய புலவீர்,

(அநங்காங்காதிய விளக்கம்.)

" வாவி யாவு மதன்பெருந் தூணிசெய்
யாவு மார னெடுக்குஞ் சிலையிடங்
காவெ லாமவன் காகள சாலைகள்
பூவை மார்மனை போர்க்கள மென்பவே"

என்பதனால், பூக்கள் நிறைந்த சகல தடாகங்களும் மன்மதனுக்கு அம்பறாத் தூணி ; கரும்புவயல்களனைத்தும் வில்லை வைத்திருக்கும் நிலைகள் ; குயில் செறிந்த சோலைகளனைத்தும் எக்காளங்கள் மாட்டிய முளைத்தானங்கள் ; ஸ்திரீ ஜாதிகள் வசிக்கும் இல்லங்களனைத்தும் அவன் யுத்தகளங்கள் ; என்பதே சிறப்பு. ஆயின் மதனம்புகளாந் திரவிய பாணங்கள் ஐந்தென்றுகூறல் என்னை ? எனின், அவை அவன் றொழிலுக்குச் சிறப்பினுட் சிறப்பாய் விசேடித்த வென்பதனலாம்; ஆக, அதனையிட்டும், விரகதாப மயக்கத்தாலுற்ற தமயந்தி கூறிய,

" கூற்ற மென்னக் கொலைபுரி வேனிலான்
றூற்றி தழ்க்கம லத்திறை நோன்மைய
ஆற்றல் சான்ற மலர்க்கணை யைந்தல
தேற்ற நல்கி னுலகினை யென்செயான்"

என்ற விதனைக்கொண்டும், கணையைந்தே யெனக் கருதல் தகாதாம் என்று பின்னுங் கூறுமுன்னமே, அப்புலவர், "வாவியாவு மதன் பெருந் தூணி" என்றதனால், தடாகத்தேயுள்ள குவளை அரவிந்தமாகிய வவையே யன்றி, அவற்றுடனங்குள்ள வேனைய சகல மலர்களுங் கணையாமெனப் பொருட்படுகின்றதே! அன்றியே, தலப்பூக்களாகிய சூதமசோகு முல்லைக ளவன் கணையன்றே? இவண் தடாகமலர்களெல்லாங் கணைகளே யென்ற வாற்றிற் றலமலர்களியாவுமே கணைகளாமே எனவுமாமன்றோ? எனவும், வில்லைப்பற்றி வினவியதிற் "சணப்பன் வீட்டுக்கோழி தானே விலங்கில் மாட்டிக்கொண்டது போலவும்" "தன்னாலேதான் கெட்டால் அண்ணாவி யென்செய்வார்" என்றது போலவும், அம்பு நம்மாற் கேள்விக் கிடமாயிற்று எனவும் இசைத்தார். அதற்கு அடியேனும் ஐய, இஃதறிவினாலேயாயினும், யாவுமெம் வாய்கொட்ட சிறப்பிக்க வேண்டுமெனக் கொண்டீர் போலும். ஆயிற் கூறுதுங் கேண்மோ. கீழேகூறிய அவ்வண்ண மேற்றலுமன்றி, "எங் கண் மாதவனிதய மாமலரிலே" சனித்தும், யாவருள்ளத்திலேயுஞ் சனித்தும் வருதலால், மனோசன், மனோபு, சித்தசன் - என்பனவாதிய பெயர்களைக் காரணத்தோடடைந்த மன்மதராசனுக்குக் "கசரததுரகமாக்கடல்" முறையே இரவே, தென்றலே, கிளியொடு பூவையே, மங்கையரேயாம். அன்றியே அவன் படைவீடு பூஞ்சோலையும் இளமஞ்சட்காடும், யுத்தகளம் சிவாசசயனமும் மனவிலாசப் பிரதேசமும், கொடிமகர மீனங்களோடு மங்கையரும் பூந்தொடையலும், பேரிகை கடலும், எக்காளங்கண்ட குயிலோ டன்றிலு மகன்றிலும், தேருருள் சந்தனச் சாணையும், சொற்றகிளியாதியாங் குதிரைச் சேணம் மல்லிகையும், கடிவாளம் இலைஞ்சியும், மகுடம் சிதனமும், உடுக்கும் பட்டு மாந்தளிரும், சரபூடணம் மாதுளமருவும், குடைசந்திரனும், அதன் காம்பு அதன் கிரணமும், சாமரை கமுகம்பாளைக் குலையும், உடைவாள் தாழம்பூவும், மெய்க்கவசம் புன்னையலரும், பரிசை மணமுஞ் சந்தனாதிப் பூச்சும் விருகினிலையும், மாலையும் வெற்றிமாலையும் இலைஞ்சித் தொடையும், காளாஞ்சி சம்பகமே வனசமே மல்லிகையே யாமலர்களும், தண்டாயுதம் அல்லியும், ஈட்டி வாழைக்குருத்தும், திருநாள் இளவேனிலும், பாடகர் கீதமதுகரரும், தோழனும் பாகனும் வசந்தனும், தம்பி சாமனும், மனைவியர் இரதியுந் தேவதாரியு மாதரியும், மகார் அநிருத்தனும் விடயாநந்தனும் - ஆடுங்கூத்துப் பேடும்,

"ஆமே கொடிவள்ளை யம்புயமு நெய்தற்பூ
தூமே சுரும்பு புனலாட்டுக்—காமவே
டென்றலுறு மென்மருகு தேராடன் மாடமதி
லன்றுநக ருக்கடையா ளம்"

என்ற சுபவள மமைந்துளதாய்ப் பொருந்துமடையாள நகரம் கந்தர்ப்பபுரியும் ஆரோக்கியமாபுரியுமாம். அத்தென்றலிரத் திருமாரற்கு அரண் மங்கையர்

குழற்காடும், மலை சுத்தோதகச் சிற்றருவியாற் றொழுக்கச் சுவாதரகியும் ஆகும். நகாங்குசனுகியவவற்கு ஏனைய பலப்பல கருவிகளுடனே காமகாண்ட மாகியவில் பூம்பச்சைத் தண்டோடு மாவு மல்லிகையுங் கமலமு நெய்தலுமா கியவற்றின் றண்டன்றிக் குறித்திட்ட கருப்பந்தண்டுமோம். அன்றியுமாம்வில் பூவாம். இதனுல் அவற்குப் புட்பதநுவா புட்பதநுவன் புட்பசாபனெனும் பெயர்களும் வழங்குமன்றே ? மேலும் இருப்பு வில்லுடனே பொன்வில்லும் மன்மத தந்திர மலர்க்காண்டீபமும் சிறந்த புட்பவிசேடக் காமநூற் சுமநசக் கோதண்டமுமாமே. நாணி,

"பட்டுநூல் பவளம் வண்டுவெண் டரளம்
விட்டுவே ளெய்யும் வின்ஞணி யைந்தே"

என்பவற்றுடன், பிச்சிக்கொடியும் தாமரை நூலும் வெட்டிவேரும் பல புட்ப நாளங்களுமாம். அம்பு கீழேகூறிய ஐந்தனோடு நெய்தலு மல்லியுஞ் சேரச் சத்தபாணமுமாம். பாவபாணம் இங்கிதம் மதநகம் வசிகரணம் மோகனம் சந்தாபமாம். நாணியிற் பொருந்தும் வண்டரே அதரும், அ-இ-உ-எ-ஒ- என்னும் ஆணெழுத்தா மதநபஞ்சாக்கரமே மந்திரமாம். இங்ஙனங்கூறிப் போந்தவற்றுற் கிரகிக்கவுந் தம்விஞவிற்கு விடையாகவும் யூகித்தமைய வேண்டுவது கரும்பெல்லாம் வில்லேயெனலும், நன்மணங்கமழு மலரெல்லாஞ் சாயகமே யெனலுமாம். சுருக்கத்துட் சுருக்கமா யுரைக்கவெனின் காமத்தை வளர்க்கும் பொருளனைத்து மவ்வநங்கனின் உபகரணங்களே யென்பர் பெரியர்.

இப்பால் நாங் குழுமிய விடந்திப்பிய கேத்திரமாதலாலும், இவண் பால-குமர-யௌவன-விருத்தரா மாண்பாலாரும், வாலை - தருணி - பிரவிடை - விருத்தையராம் பெண்பாலாருங் கூடியிருத்தலாலும், அத்திருமகண் மகன் அம்பெய்யுமிடம் அவை செய்யுமவற்றை அவையிற்றைச் சார்ந்தன பலவா மவையெல்லாம் விந்தாரப்படப் பிரசங்கித்தல் கூடாததன்றே? அங்ஙனம் பிரசங்கிக்கினு மது பிரத்தியேகமாவதோர் மதனுகமப் பிரசங்கமாம். மற்றொன்று விரித்தலாகுமாதலின் அதனை இவண் ஈறுவிமேலே செல்லுவாம். தேவர் மக்கள் விலங்கு புள்ளாதிய வகுப்பிற் கொவ்வோர் தனிவில்லும் வளைக்குமவன், திரிமூர்த்திகளையுந் தன்னுணைக்குட் படுத்திவரும் பெருமை வாய்ந்த தெய்வமன்றே ?

"ஒத்தேறு முருவமில்லாப் பிரமமொன்றே யொழிய வுருவ முள்ளா
ரெத்தேவ ராயினுமோர் பூங்கணையாற் றம்போத மெல்லா நீங்கி
மத்தேறி யுடைதயிர்போன் மனஞ்சுழன்று செயன்மறந்து மடவா ராசைப்
பித்தேறி யிதழுரைத்தப் பேதையர்க்குப் பேதையராய்ப் பின்செல் வாரால்."

"அலையேறும் வாரிதிரு ழம்புவியி லெனைவெல்வா ராரே செந்தீ
யுலையேறு மெழுகனமுத் தேவரும்பூங் கணைக்காற்று நுருகி வெள்ளி

மலையேறி னானொருவன் கடலேறி னானொருவன் மறந்து விண்ணின்
றலையேறி னானொருவ னாயினும்போ யின்னமங்குத் தவிர்ந்தார் கொல்லோ?''
"வேதாவு முகம்வெளுத்து விண்டுமோர் பகஞ்சிவந்து விடைவல் லோனும்
பாதாதி கேசாந்தம் பாதியுடல் கறுத்துவச்சிர பாணி வேந்தும்
போதாமன் முகத்திருகண் புரத்துமோ ராயிரங்கண் புகுதப் பெற்ற
தேதாலென் கணைதுரக்கி வீடுபடா ரெவரேதா மிலக்காகாரே''

எனப் 1 பாவயோனிய னாதலால் 2 அசினயோனியோடு 3 கிருபீட யோனியைக் கரந்தாங்கு 4 சாமகானனாற் சாப்பட்டானென வாளா பொய்ம் மையிற் புகலப்படுஞ் 5 சாமயோனியாம் 6 பதுமயோனி யிளவலான 7 பருவயோனியத்தச் 8 சங்கற்பயோனியே கூறியுள்ளது மறியீரல்லீர்.

அச்சம்பராரிக்குச் சிறந்த சிறப்பாகக் கூறப்படுவதும், சதாவவன் புயத் தேயுற்றதும், கெட்டுவாடாது - ஒடியாது, முதிர்ந்து வெண்டோடியு மிக விளமையா யுவர்த்து நில்லாது, பக்குவவினிய விளமையேறிய தெய்விக வொற்றைக் கருப்புவில்லின் திவ்யசத்தி இத்தகையதென எவராற் கூற லமையும்? இதனைக் கூறப்புகுந்ததானன்றோ ஆதிசேடற்கு ஆயிரநாவும் பிளந்துகெட்டதுஞ் சரசோதிக்கு மூக்குப் போயினதுமாயின. நிற்க, அத் தெய்விகத் தன்மையுற்ற காமகாண்ட நாமக் கழைத்தநுவையுருவிலி வளைக் குந்தோறும் வளைக்குந்தோறும், அப்பிரத்தியுங்கன் பாணங்களுக்கு முன்னோ டுந் தூதாகவும், இலட்சியங் காட்டவிட்ட குறியாகவும் காமரங்கணுக்களினின் றும் முத்துக்கள் தெறித்தோடுவதும், சிமிருங்கால் ஒத்தசித்தில முடனே யுற்பத்தியாதலு மாமேயெனி னென்னைகாண்? கூறிப்போந்தாங்கத் * துரோ ணமுனிக்குக் கடவுட்டன்மை யுண்டெனலை மறத்தல் கூடாததன்றோ? என்று கூறவே அப்புலவரு மமைந் தடங்கினர்.

சி. சாமிநாதபிள்ளை.

---

## RAMAYANA VENBA.
## இராமாயண வெண்பா.

---

### பாயிரம்.

#### காப்பு.

கடலுலகில் வெள்ளைக் கவியா லிராமன்
அடல்பரவு விக்க வருளும்—தடவிலுப
காரிமா றன்றீங் கனியிசைப்பாக் காட்டுகவி
காரிமா றன்பூங் கழல். (1)

---

1. பாவி.—2. மான்.—3. நெருப்பு.—4. சிவபெருமான்.—5. 6. பிரமன்.—7. கரும்பு.—8. மன்மதன்.

* துரோணமுனி = துரோணமாகிய முனி—துரோணம்; முனி - என்பனவில்லாம்.

### இதுவுமது

சீரா ரிராமா யணவெண்பாச் செப்புதற்குத்
தாரார் தமிழ்வேதந் தந்தருளிப்—பாராரும்
கற்பா ரிராம பிரானேயென்று கட்டுரைத்த
சொற்பா வலன்றாள் துணே. (2)

### அவையடக்கம்.

வெண்பாவில் வல்லுநர்கண் மேவுபெருந் தேவனார்
எண்பாரி னல்லபுக ழேந்திமுதல்—நண்பானோர்
முன்பாக நான்மொழிதல் மூங்கைநல் யாழிசைத்தற்
கன்பாக வேமுயன்ற தாம். (3)

### வரலாறு.

தேய்வ மலர்க்காகச் செல்வீமன் மாருதியை
வய்து நெறிக்கண் ணினிதுற்றுச்—செய்தநண்பின்
முன்னோன்றன் பின்னோ னுவக்க மொழிந்தனனாற்
பொன்னோன்ற மார்பன் புகழ். (4)

பஞ்சவரில் விஞ்சு பலமுடைய மாருதியே
செஞ்சொ லுடைய தெசரதன்றன்—மஞ்சர்களிற்
கோதண்டன் றன்சரிதம் கூறுவேன் கேட்டிடுக
கோதண் டெதலின்றிக் கொண்டு. (5)

சீதா பிராமன் றிருக்கதையைக் கேட்பவர்க்குப்
போத ஙினைத்தபொருள் பொற்புபலம்—மோதுபோர்
வெல்விஜய மின்னபல வேண்டுவன மேவுவன
நல்விஜய சோதரனே நன்கு. (6)

மக்கள் மனைவிபதி மாநட்பு மேன்மைமித்ரர்
ஒக்க வினைய ரொருமைதுட்ட—விக்கிரகம்
சிட்ட பரிபா லனமுரைசெய் செஞ்சரிதம்
எட்டுவிக்கும் வீட்டுலக மே. (7)

### காரண முதலியன.

வெள்ளைக் கவிவிருப்பாற் சொன்னேனால் வேறன்று
வள்ளற் கவிச்சக்ர வர்த்தியருள்—தெள்ளுகவி
ஓரிடைச் சொற்பொருளு மோர்ந்துணரே னோர்ந்தவர
வோரிடைச்சொல் லோடுநகை யுற்று.

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

### பாலகாண்டம்.

#### நாடு.

செங்கமலம் பொன்னேற்கத் தேங்குவளை தேனேற்க
அங்கமுகின் பாளை யரும்பமுத்தம்—சங்குதவழ்
மாசரயு வாளை துள்ள வாரியலை வீசுபண்ணைக்
கோசலநன் னாடென்ப கொண்டு. (1)

வாழை கமுகலைப்ப வான்றேற னெல்விளைப்பத்
தாழை மலர்விள்ளத் தண்கன்னல்—ஊழில்
மதனன் குடையை வருடி மறுத்தீர்த்
திதனன் குடைத்தாக்கு மே. (2)

கோக்கடக்கங் காட்டக் குருகு நடைகாட்ட
மக்க டயிலவண்டு வண்கீதம்—மிக்குறவே
பாட கிலமருதப் பாவையர்கள் பாண்குரவை
யாட கிலவுறு மால். (3)

கண்கட்டு வித்தை களைகட்டு வித்தையிவை
பண்கட்டு சொல்லார் பயின்றுபயிர்—விண்முட்டி
யோங்கவு மாடவருக் கொண்காம மென்பயிர்மேற்
பாங்குறவு மேவிளைவிப் பார். (4)

பொன்மாரி நாவலர்க்குப் பெய்யும் புரவலன்போல்
விண்மாரி பெய்ய விதைவித்தி—மண்மா
மகளுடலைப் பைம்பூம் பயிர்ப்போர்வை மண்ணிப்
புகழுடல்போற் செய்வார் புரிந்து (5)

வாய்மை கடைப்பிடித்து வண்மை தவறாத
தூய்மையர சன்புகழ்போற் சொல்லெல்லாங்—காயாப்
பலமா நனிகனிந்து பார்மன் பதைக்கு
நலமா வளர்ந்துநல்கு நாடு. (6)

தாசரதி மன்பதைமேல் வைத்த தயைபோல
மாசில் சரயு வளங்காட்ட—ஆசில்
மலைகடல்கான் காட்டும் வளப்பொருள்கள் மல்கும்
நலவடபாற் கோசலநன் னாடு. (7)

#### நகர்.

பொன்னேக் கணியும் புலனேக் கரும்புகழ்வும்
எந்நோக் கரும்விரும்பு மேணிலையும்—பின்னேக்கில்

நோகேத மின்மையொடு நோவுமொரு வீடென்ப
சாகேத மென்னுநகர் தான். (8)

மாதவரும் மானவரும் வானவரும் வாழ்ந்துலகிற்
போதசுகங் கொண்டியலும் பொற்புறலால்—மேதகவே
வாழ்வுறுமவ் வைகுந்த * மானக ரயோத்தியென்ப
சூழ்வுறிலெவ் வூர்பொருவ சொல் (9)

போரா லழியாப் புரியுளதே லிந்நகர்க்கு
நேரா நிகழ்த்தலா நீள்சரயு—வாருமது
மாவிரசை மானகர மானுமதில் வாழ்மன்னன்
மாவிரசை மாணிகரு மால். (10)

நாக முறுகொடிகள் நாக முறவிரண்டு
நாக முறுசுடர்கள் நாகமென—நாக
மரக்கா நக்ரநடு வண்ணனு காபா
மரக்கா வலர்க்கஞ்சு மாறு. (11)

திருவவதாரம்.

அங்கரை யாண்டுவந்த வாதித்தன் மாமரபு
மன்னு தயரதப்பேர் வாள்வேந்தன்—பன்னரிய
புத்திரப்பே றின்றிப் பொருகலைக்கோட் டாரியனால்
அத்திரத்து வேள்விசெய்வித் தான். (12)

மகத்தி லெழுந்துவந்த மாபூதந் தந்த
தொகுத்தவமு தத்திரளைத் தொட்டுப்—பகுத்துத்தன்
மும்மனைவி யாரை முறையே யருந்துவித்தான்
வெம்முனைவெல் வெங்களிற்று வேந்து. (13)

மேட மதிநவமி மீன்கழை கற்கடகம்
நாடு பதினென்றில் நால்வருயத்—தேடைவர்
உச்சமுறக் கோசலைபா லுற்பவித்தான் விண்ணோர்தம்
அச்சமற மெச்சுபுத னங்கு. (14)

ஒருமகவைக் கைகை யுதவ விருசேய்
அரிய சுமித்திரையீன் றாளால்—கிரையாய்
இராமன் பரத னிலக்கு மணன்சீர்ப்
பராவுசத்து ருக்கனென்போர் பார். (15)

நாலு மறைபோலிந் நால்வருங்கலை வித்துறைகள்
ஏல முறையா லினிதுகற்றுச்—சாலவளர்
போதுவிசு வாமித்ரன் போந்துமன்ன னின்னுதிக்
காதலனைத் தாவென்றான் கண்டு. (16)

* மால் + நகர்.

மண்ணெனினுஞ் செல்வக் கடலெனினு மற்றெந்த
எண்ணெனினுங் கேட்கி லினிதீவேன்—மண்ணிலுமவ்
விண்ணிலுநின் மேவா ரிருக்கி லவரைவென்று
நண்ணுவன்சொ லிக்கணத்து நான். (17)

என்றா னிகன்மன்ன னேற்றான் சினமுறுவன்
கன்றா விழியிற் கனலெழவே—நின்றான்முன்
நேரா வசிட்ட னிலைகண்டு மன்னநின்சேய்க்
காராய்க நன்மையென்றா னால். (18)

புறவைக்காத் தன்னூன் பரிந்தளித்தோன் சேயும்
அறவுயிரீ வான்போ லளித்தான்—அறவன்கைக்
கொண்டுறுவா னாற்றார் குமரர் மலர்தொடரும்
வண்டுறழச் சென்று மருங்கு. (19)

சொல்வித்த விஞ்சை சுரங்கடத்தக் கோக்குமரர்
நல்வித் தகன்பின் னடந்துசென்று—வில்வித்தன்
தாடகையைக் கொன்று தனைய ரிருவரிலோ
ராடவனை விண்ணேற்றி னான். (20)

அருவேள்வி காத்தளவி லாய்படைக ளேற்றுங்
குரைபல் சரித முணர்ந்து—கரியசெம்மல்
கல்லைத்தன் காற்பொடியாற் பெண்கண்டு கௌதற்கீந்
தெல்லைக்கண் டான்மிதிலை யே. (21)

பொன்பெற்ற தாலரிய பூவிற் சிறந்ததால்
மின்பெற்ற வண்டர் விரவுவதால்—நன்பெற்ற
நீர்நிலைய தாற்றண்டு நிற்பதனாற் கஞ்சமென்ப
ஏர்நிலைய தாமிதிலை யே. (22)

பூவின் முடியோ புலவர் பெரும்புகழோ
தேவன் புவியளந்த சேவடியோ—கோவின்
புரத்தேறு மேணியோ வென்னநின்ற பொற்கோ
புரத்தூர் புகுந்தார் புரிந்து. (23)

கண்ணோ கமலக் கடிமலரோ கற்பகமோ
எண்ணோ வெனுங்கன்னி யோர்மாடப்—பெண்ணோ
வழுவா வெனது மனநிலையைப் பேர்ப்பாள்
எழுவா ளிவளென்றா னீங்கு. (24)

தி. கோ. நாராயணசாமிப் பிள்ளை.

## TEN PROVERBS.

# பழமொழிப் பத்து.

### காப்பு.

பண்பாடு நீதிப் பழமொழியி னிற்சிலயான்
வெண்பாவீ ரைந்தில் விளம்புதற்குக்—கண்பாயும்
வையைநாட் டிற்றிலக மாமதுரை யாளுமுமை
துய்யமலர்ப் பாதந் துணை.

1. முன்மொழியா நூலின் முதிருஞ் சுவைபலவும்
புன்மொழிபெ யர்ப்பிற் புலப்படுமோ—வின்மொழிசே
ளோவியத்திற் றேற்ற மொருவர் றமைந்திடினு
மாவிகுண முந்துலங்கு மா.

2. மாசொன் றுளதாய வைரமோ வெட்டுணையுந்
தூசிமரு வாப்பரலோ தூயதாந்—தேசிகன்முன்
பொய்த்த தருமனே பொய்த்தலிலா மூங்கையோ
வுத்தமனு மன்னு னுரை.

3. என்றுங் கயவ ரிழைத்திடினுந் தீமையினை
நன்றியே தாம்புரிவர் நல்லோர்கள்—ஒன்றியே
தன்னைக் குறைத்திடினுஞ் சந்தனந்தான் கோடரிக்
கின்மண மீத லியல்பு.

4. காலவே யீனநிலை சார்ந்திடுநா ளப்பொருட்கு
மேலா நிலைதுணியின் மேவுமே—சீலமுட
னேதுங் கதியிலதென் றேங்குறுபாஞ் சாலிதனைத்
தீதணுகா திட்டசெயல் தேர்.

5. வித்தைவிந யத்தால் விநயந் தகைமையினா
லத்தகைமை யீட்டு மரும்பொருளால்—வித்தமுஞ்
செம்மைநெறி சேர்ந்தொழுகுஞ் செய்கையாற் சீர்பெறுமே
யிம்மைமறு மைச்சுகமு மீந்து.

6. ஆவனவா மெவ்வினையு மாகா தொழியாவாம்
போவனவும் போமே புவிமீது—தீவிரமாத்
தெங்குளிள நீரினையுஞ் சிந்துரந் துற்றியவா
பங்கமுறு வெள்ளிலையும் பார்.

7. வித்தையொடு வித்தம் விழையுங்கால் வீதனரை
யெத்துணையு மேற்கிலமென் றெண்ணுமின்—சித்தந்
தருமம் புரிமின் றருணம்வே றில்லை
யுருமிவருங் கூற்றை யுனி.

8. மாந்தர் மதிப்பு மருவரிய நன்னிலையு
மேந்திழையாண் மக்க ளிருநிதியுஞ்—சார்ந்தனையே
மாயவெஞ் சூதின் வலியான் மறுகணமே
போயவா லாவா புரண்டு.

9. நல்லா ரிடத்து நலந்தேடார் குற்றமே
பொல்லாத மாந்தர் புகல்வரா—னல்லாய்கே
ளாவி னினிய வமுதினைவிட் டீயதன்கண்
மேவியபுண் ணீர்விரும்பு மேல்.

10. மாநிலத்தா ரந்தோ மறலி தனைமறந்தே
யீனமுறு மின்பத் திழுபடுவர்—ஞானமிலார்
மண்டு மசகமதை வாய்க்கொ டவளையைப்பாம்
புண்டறனைக் கண்டறியா ரோ.

நா. வே. சுந்தரராஜ ஐயர்.

---

## RAINBOW : A SONNET.

## வானவில் : ஒரு தனிப்பாசுரம்.

இருண்முகி னனிதிரண் டிமிர்வா னிடையெம
தருண்மிகு மிரவியி ஞரொளி பாயவாண்
டொல்லையின் வானவி லொளிர்தல் கண்ணுறு
மெல்லையி னெமதக மிருங்குதி கொளுமால்.
எழின்மயிற் றோகையி னியனலங் கவர்ந்து
கெழுமிய பன்னிறங் கிளரத் தோன்றி
வான்படாத் தொருவன் வரைந்தபொற் கோடெனத்
தான்பொறி தூரியத் தனிநலங் கவற்றி
யிலங்குந் தோற்றம் புலங்கொளுந் தொறுமன
மெம்வயி னில்லா தம்மவோ டுறுமால்.
உற்று நோக்கினஃ தெற்றயங் கியசுடர்ச்
சோதியங் கடவுட் றேதருட் பேரொளி
சிறந்த மாயையுட் சேரப்
பிறந்தழி யுடலினைப் பெரிது சிகர்க்குமே.

ந. பலராமையர்.

## THE HIDDEN FOURTH.

## கூடசதுக்கம்.

[ஆதிபுரி வடிவுடையம்மைமீ தியற்றப்பட்டது.]

**கட்டளைக் கலித்துறை,**

தேராத மாமல யாகில மேவுறுந் திண்புலவற்
காராயும் போதைந் தொரு வேழ மிந்த வனப்பெடைவான்
சீராணற் கேழ்முடி மாதரி பேணிச் சிறியனையாள்
பேராரு மாதி புரிவாழ் வடிவுடைப் பெண்ணமுதே.

☞ நான்காமடியி னெழுத்துக்கள் ஏனைய மூன்றடியினுள்ளுங் கரந்து கிடத்தலின் இதுகூட சதுக்க மாமாறு காண்க.

திரு. இராமசாமிச்செட்டியார்.

---

## RADHARANI : A NOVEL.

## இராதாராணி.

---

### நான்காம் அத்தியாயம்.

புதிதாய் வந்த அந்தப் பெரிய மனிதனுடைய வஸ்திரங்கள் பங்காள தேசத்துப் பெரிய மனிசர்களது வஸ்திரங்களைப் போலிருந்தன; மிகவும் டம்பமாயு மில்லை ; அதி சாமான்யமாயு மில்லை. ஆனால் அவன் கையில் ஒரு வைர மோதிரம் அணிந்திருந்தான் அதைப்பார்த்து இராதாராணியின் சேவகர்கள், நாம் எப்பொழுதும் இவ்வளவு சிறந்த மோதிரத்தைப் பார்த்ததேயில்லையென்று பரஸ்பரம் பேசிக்கொண்டார்கள். பெரிய மனிதனுடன் எவரும் வாராமையினால் இவன் யாரென்று விசாரித்து அறிந்துகொள்ளச் சரிப்படவில்லை. அவன் தானாகவே தன் சமாசாரத்தைச் சொல்வானோ என்னவோ என்று எதிர்பார்த்திருந்தார்கள். ஆனால் அவன் தன் செய்தியைச் சொல்லவில்லை. அவன் இராதாராணியின் திவானிடம் சென்று அவன் கையில் ஒரு காகிதம் கொடுத்து இதை யுங்கள் எஜமானியிடம் கொடுத்துப் பதில் கொண்டு வரவேண்டு மென்றான். **திவான்**—எங்கள் எஜமானி பெண்பிள்ளை ; கல்வியாணமாகாதவர்; இன்னமும் இளம் பிராயத்திலேயே இருக்கிறார். ஆகையால் யாராவது அறிமுக மில்லாதவர்கள் அவருக்குக் காகிதம் கொடுத்தால், நான் முதலில் படித்துப்பாராமல் அவருக்கு அனுப்பக்கூடாதென்று உத்தரவாயிருக்கிறது. **பெரியமனிதன்**—நீங்கள் படிக்கலாம்.

திவான் காகிதத்தைப் படித்தார் :—

"பிரிய சகோதரீ,

இவர் புருஷனு யிருந்தாலும் ஏகாந்தமாய் இவருடன் பேசத்தகும். பயமொன்றும் இல்லை. நடந்த சமாசாரத்தை எனக்குத் தெரியப்படுத்துக.

இங்ஙனம்

வசந்தகுமாரி."

காமாக்கியன் மகள் கையெழுத்தைப் பார்த்து ஒருவரும் ஒன்றுமாக்ஷேபிக்கவில்லை; கடிதம் அந்தப்புரத்துக்குப் போயிற்று. அந்தப்புரத்தினின்று பரிசாரிகை யொருத்தி காகிதம் கொண்டுவந்தவனை அழைத்துக்கொண்டு போவதற்குவந்து, வந்த பெரியமனிதனைப் பின் அழைத்துக்கொண்டு போனுள். வேறெவரும் அவனுடன் கூடப்போகவில்லை: உத்திரவில்லை. பரிசாரிகை அந்தப் பெரிய மனிதனை யழைத்துக் கொண்டுபோய் அநேக விதமான அபூர்வ வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட மஹாலில் உட்காரவைத்தாள். இராதாராணியின் அந்தப் புரத்துக்குட் புருஷன் பிரவேசித்தது இதுவே முதல் தடவை. இவனைப் பார்த்ததும் ஒரு பரிசாரிகை இராதாராணியைக் கூப்பிடப்போனுள், மற்றொருத்தி மறைவில் நின்றுகொண்டு வந்த புருஷனை இமை கொட்டாமற் பார்த்த வண்ணமாய் நின்றுகொண் டிருந்தாள்.

அவனுடைய மேனியின் நிறம் வெண்மையாயும் மலர்ந்த மல்லிகை ராசியையொத்துமிருந்தது; அவனது சரீரம் நீண்டும் சிறிது பருத்து மிருந்தது. கபாலம் தீர்க்கமாயும் அதி சூக்ஷ்மமாயும் பரிஷ்கரிக்கப்பட்ட மிகவும் கருமை நிறமுள்ள சுரஞ்சிதமான கேசஜாலத்தினுல் அலங்கரிக்கப்பட்டிருந்தது; கண்கள் அகன்று நிலையுள்ள கடாக்ஷத்துடன் கூடியிருந்தன. இரண்டு புருவங்களும் சூக்ஷ்மமாயும், மெல்லிய வாயும், கனத்த கறுமை நிறம் பொருந்தியுமிருந்தன; மூக்கு நீண்டும் உயர்ந்து மிருந்தது; அதர்மரக்த வர்ணமாய் மெல்லியதாயும் கோமளமாயு மிருந்தது. கழுத்து தீர்க்கமாய்ச் சதை அடர்ந்திருந்தது. மற்றைய அங்கங்கள் உடையினுல் மறைந்திருந்தன. வஸ்திரத்தினுல் மூடப்படாது காணப்பட்டுக் கொண்டிருந்த கைவிரல்கள் சுப்பிரமாயும் நன்ருயமைந்தனவாயும் இருந்தமை யன்றி பவித்திர விரலில் மிகவும் சிலாகிக்கத் தகுந்த உயர்ந்ததோர் வைரமோதிரம் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

இராதாராணி அங்கேவந்து நின்று பரிசாரிகையை வெளியே போகும்படி சொன்னுள். இராதாராணி வந்தவுடனே அந்த மஹாலில் உட்கார்ந்திருந்தவனுக்கு ஓர் அபிநவ சூரியோதயமானது போன்றிருந்தது. அந்த ரூபராசியின் காந்தி அதன் தலையிலுள்ள கூந்தல்வரை ஒளிர்ந்தெழுந்ததோ என்னும்படி பிரகாசித்துக் கொண்டிருந்தது. இராதாராணி அந்தப்புருஷனுக்கு பிரதம தர்சனத்துக்குசிதமான வணக்கம் செய்யவேண்டியது அவசியம். ஏனெனில் அவன் புருஷனும் மேலும் வயதிற் பெரியவனுயும் இருந்தான். ஆனுல் அப்பொழுது அவன் அந்த உவமையற்ற சவுந்தரியத்தைக் கண்டு மதிமயங்கியும் அசைவற்றும் இருந்தான். இராதாராணி சிறிது அதிர்ப்திபடைந்து தாம் இப்படி இரகசியமாய் என்னைப்பார்க்க விரும்பினதற்குக் காரணம் யாது? நானே பெண்பால்; கேவலம் ஸ்ரீமதிவஸந்த குமாரியின் வார்த்தையின்மேல் தம்மைப் பார்ப்பதற்குச் சம்மதித்தேன் என்ருள். பெரிய மனிதன் - நான் உன்னை இப்படிப் பார்ப்பதற்கு மாத்திரமே இஷ்டப்பட்டு வந்த

வனல்லேன். இராதாராணி சிறிது வருத்தமடைந்து, அப்படி யில்லாமலிருக்கலாம்; ஆனால் வசந்தகுமாரி என் இப்படி நான் தம்மைப் பார்க்கவேண்டுமென்று விரும்பினளோ அதைப்பற்றி அவள் எழுதவில்லை. தங்களுக்கு அது தெரிந்திருக்கலாமென்பது தோன்றுகின்றது.

பெரியமனிதன் ஒரு பழைய சமாசார பத்திரிகையை வாங்கி இராதாராணிக்குக் காண்பித்தான். அதைப் படித்துப்பார்க்கவே காமாக்கியன் தன் பேரால் பாபு ருக்மிணீகுமார ராயனுக்குக் கொடுத்த விளம்பரமா யிருந்தது. இராதாராணி அதுவரைக்கும் நின்றிருந்தாள். நின்றிருந்த வண்ணமாகவே தென்னம் ஓலைபோல் அசைந்தாள். பெரியமனிதனுடைய தேவதுல்லியமான தேகக்கட்டைப்பார்த்து இவரே அந்த என்னுடைய ருக்மிணீ குமாரராயரென்று கருதினள். இனிச் சகிக்கமுடியாதவளாய் தாங்கள் ருக்மிணீ குமாரராயரவர்களா? அதுவே தங்கள் பெயரா? என்று கேட்டாள். பெரியமனிதன்—அன்று. 'அன்று' என்ற வார்த்தையைக் கேட்டு இராதாராணி மெள்ள ஆசனத்தில் உட்கார்ந்தாள். இனி நிற்க முடியவில்லை. மார்பு பிளந்துவிட்டதுபோலிருந்தது. பெரியமனிதன்—அன்று; நான் ருக்மிணீ குமாரனாயிருக்கும் பக்ஷத்திற் காமாக்கியன் இந்த விளம்பரத்தை வெளிப்படுத்தியிரான். ஏனெனில் அவனுக்கும் எனக்கும் மிகவும்பரிசய மிருந்தது. ஆனால் விளம்பரம் பிரசித்தமானவுடனே, நான் பார்த்து வாங்கிவைத்துக் கொண்டேன் என்று சொன்னான். இராதாராணி—தங்களுக்கும் இந்த விளம்பரத்துக்கும் சம்பந்தமில்லாமலிருக்க இதனை என் வாங்கி மறைத்துவைத்துக் கொண்டீர்கள். பெரியமனிதன்—ஓர் ஆவலின் பொருட்டு வாங்கிவைத்துக் கொண்டேன். இந்த எட்டு வருஷங்களாக அங்கங்கே திரிந்து கொண்டிருந்தேன். ஆனால் ஜனங்கள் சொல்லிக்கொள்வார்கள் என்னும் பயத்தினால் என் நிஜமான பெயரை வெளிப்படுத்தாமற் கற்பனையான பெயரைச் சொல்லிக்கொண்டிருந்தேன் என்னுடைய கற்பனைப் பெயர் ருக்மிணீ குமாரன். நீ இவ்வளவு வருத்த முறுவதற்குக் காரணம் யாது? இராதாராணி சிறிது மனம் தேறினள். பெரியமனிதன்—ருக்மிணீகுமாரனென்னும் பெயருள்ளவனை நான் பார்த்ததில்லை. என்னைப்பற்றியே விளம்பரம் பிறந்திருக்குமோ? அப்படிப் பட்ட விசேஷ மொன்றுமில்லை. ஆனால் அதனை யாவர் நிஷ்கர்ஷையாய்ச் சொல்வதற்குக் கூடும்? பிறந்திருக்குமோ, என்னவோ? இருக்கட்டும்; பார்க்கலாமென்று விளம்பரத்தை வாங்கி வைத்துக்கொண்டேன். ஆனாற் காமாக்கியனைப்பார்க்க எனக்கு அநுகூலப்படவில்லை.

"அதன்மேல்".

அதன் மேல், காமாக்கியனது சிராத்தத்துக்கு வரவேண்டுமென்று அவன் பிள்ளைகள் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள். ஆனால் வேறே காரியங்களிருந்தமையால் எனக்கு வருவதற்குச் சாத்தியப்படாமற் போயிற்று. இந்த என் தவறுக்கு மன்னிப்பு வேண்டிக்கொண்டு போகலாமென்று அவன் பிள்ளைகளிடம் வந்தேன். வரும்பொழுது, ஏதோ கவனமில்லாமல் விளம்பரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு வந்தேன். அப்படியே பேசிக்கொண்டிருக்கையிற் பிரஸ்தாபத்தின் மேல், இந்த விளம்பரம் எதற்காகக் காமாக்கியநாதன் பிரசுரித்தான் என்று பெரிய குமாரனைக் கேட்டேன். அவன் இராதாராணிக்காகப் போடப்பட்டதென்றான். நான் இராதாராணி என்பவள் ஒருத்தியைப் பார்த்திருக்கின்றேன். அவள் சிறு பெண். நான் ஒரே நாள்

தான் பார்த்த போதிலும் மறுபடியும் அவளை நான் மறக்கவில்லை. அவள் தாயாரின் பத்தியத்துக்காகத் தான் உபவாசமாயிருந்து வன புஷ்பமாலையைக் கட்டிக்கொண்டு அந்த இருட்டு ராத்திரி மழையில்,— மேலே சொல்லப் பெரிய மனிதனுக்கு நா எழவில்லை. அவன் கண்களினின்று நீர் பெருகிற்று. இராதாராணியின் கண்களினின்றும் நீர் பெருகத் துவக்கிற்று இராதாராணி கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, அந்தப் பழும் சிறு நாளைய சமாசாரத்தைக் கட்டிக்கொண்டு என்ன பிரயோஜனம்? தங்கள் கதையைச் சொல்லியாகட்டும் என்றாள்.

பெரியமனிதன் - ஐயோ! அவளை வையக்கூடாது; இப்பிரபஞ்சத்திற் சந்திரமுகி எவளாயினு மிருந்தால் அவள்தான் இராதாராணி; எவளாயினும் பவித்திரமான ஸரள ஹிருதய முள்ளவளாயிருந்தால் அவள்தான் இராதாராணி; அமிர்தமயமான உரைகளாடுபவளாயிருந்தால் அவளே இராதாராணி; யதார்த்தத்தில் அமிர்தமயமான வாணி - அவள் பேசும் பிரதி அக்ஷரத்திலும் வீணையின் ஒலி துவனிக்கும், மிதபாஷிணி, மேலும் வார்த்தைக ளெல்லாம் பரிஷ்காரமாயும் சுமதுரமாயும் இருப்பதே யன்றி மிகவும் ஸரளமானவை. யானெப்பொழுதும் அத்தகைய கண்ட ஸ்வரத்தை யாவது வார்த்தைகளையா யாவது கேட்ட தில்லை யென்றான் ருக்மிணீ குமாரன்—(பிரகிருதம் இவனுக்கு ருக்மிணீ குமாரன் என்றே பெயரிருக்கட்டும்), மேல் விவரித்த விதமாய் வர்ணனை செய்துகொண்டே மனதின் கண், இன்று அத்தகைய கண்டஸ்வரத்தைக் கேட்பது போலிருக்கிறதென்று எண்ணிக்கொண்டு, மீண்டும், அக்கன்னிகையின் கண்ட ஸ்வரத்தைக் கேட்டு இத்தனை தினங்களானபோதிலும் அதை நேற்றே கேட்டதுபோலிருக்கின்றது; இன்று இந்த இராதாராணியின் கண்ட ஸ்வரத்தைக் கேட்டு அந்த இராதாராணியே ஞாபகத்துக்கு வருவதேன்? இவளே அந்த இராதாராணியா யிருப்பாளோ? நான் சுத்த உன்மத்தன்! ஏழையும் துக்கானுபவியும் குடிசை வாசியுமான அந்தப் பிச்சைக்காரி யெங்கே? இந்த உயர்ந்த மாளிகையிற் சுகித்திருக்கும் இந்திராணி யெங்கே? ஒன்றுக்கொன்று சம்பந்த மெங்கே? நான் அந்த இராதாராணியை இருட்டிற் சரியாய்ப் பார்க்கக் கூடாமையால், அவள் சுரூபியோ குரூபியோ நன்றாய்த் தெரியவில்லை. ஆனால் சசிதேவியையும் பழிக்கும் இந்தச் சுந்தரியின் சதாம்சத்தில் ஓரம்ச ரூபமாயினும் அவளுக்கு இருந்த பக்ஷத்தில் அவள் உலகமோஹினியே யாவாள். அதற்கொன்றும் சந்தேகமில்லைஎன்று எண்ணிக் கொண்டான்.

இது நிற்க, அதிர்ப்தியடைந்த செவிப் புலனுடையவளாய் ருக்மிணீ குமாரனது இனிமையான வாக்கியங்களைக் காதாரக்கேட்டு, மனத்திற்குள், நீ பாவியான இந்த ராதாராணியைப் பற்றிக் கூறுவதெல்லாம் உனக்கு மாத்திரம் தகுந்ததாயிருக்கின்றது; நீ இந்த எட்டு வருஷங்களுக்குப் பின்பு இராதாராணியை மீண்டும் மோசஞ்செய்து விட்டுப்போவதற்கு நந்தனவனத்தை விட்டுப் பூமிக்கு இறங்கிவந்தாயா என்ன? என்மானசிகபூஜை உன்னைச் சேருவதற்கு இந்நாட்கள் பிடித்தனவா என்ன? நீ அந்தர்யாமியா என்ன? அப்படி யில்லாத பக்ஷத்தில் மூடி மூடி வைத்துக்கொண்டு மனத்தின்கண்ணே செய்துவந்த இந்தப்பூஜை உனக்கெவ்வாறு தெரியும்? என்றிங்ஙனம் எண்ணிக் கொண்டாள்.

இவர்களிருவரும் நல்ல வெளிச்சத்திற் பரஸ்பரம் நன்றாய்ப்பார்த்துக் கொண்டது இதுதான் முதல்முறை. இருவரும் பரஸ்பரம் முகத்தைப் பார்த்

துக்கொண்டு தமக்குள்தாம் தம் எதிரேபார்த்துக் கொண்டிருக்கும் ஆகிருதியைக் குறித்து, இனி இத்தகையது உண்டா? இந்தக் கடல் சூழ்ந்த பூவுலகத்தின் கண் இது போன்ற தேஜோமயமானதும் இப்படிப்பட்ட மதுரமானதும் இவ்வளவு சுகமயமானதும் இத்தகைய சஞ்சலமா யிருந்தும் ஸ்திரமானதும், இவ்விதம் மலர்ந்திருக்கும் லஜ்ஜையுடன் கூடியதுமான வஸ்து மற்றொன்றுள்ளதோ? வெகு நாளாய்ப் பரிசயமாயிருந்தும் மிகவும் அபிநவமாயும், ஒவ்வொரு க்ஷணத்திலும் அபிநவமதுரமாயும் சொந்தமாயினும் அத்தியந்தம் அயலாயும் வெகுநாளாய் ஞாபகத்திலிருந்தும் அதிர்ஷ்ட பூர்வமாயுமுள்ள இவ்வித பதார்த்தத்தை நான் எப்பொழுதும் பார்த்ததில்லை. இனி என்றும் பார்க்கப்போகிறதில்லை இனி இதுபோன்றது உண்டாமா? என்றிவ்வாறு ஒருவரைப் பற்றி யொருவர் சினைத்துக்கொண்டார்கள்.

இராதாராணி மிகுந்தகஷ்டத்துடன்,---கண்ணீர் பெருகுவது நிற்கவில்லை; இப்பொழுது எங்கிருந்தோ பாழுஞ்சிரிப்பு ஒரு பக்கம் வந்துகொண் டிருக்கிறது. ஆகையால் மிகுந்த கஷ்டத்துடன் தாங்கள் இதுவரையிற் கேவலம் பிச்சைக்காரியின் பேச்சையே சொல்லி முடித்தீர்கள். தாங்கள் இங்கே வந்து தரிசனம் கொடுப்பதற்குச் காரணம் என்னவோ அதைக்குறித்து ஒன்றும் சொல்லவில்லை என்றாள். இதைப்படிக்கும் நண்பர்களே, நீங்கள் சொல்லுங்கள். இந்தப் பேதைப்பெண் என்ன வார்த்தை கேட்டாள்? இப்படி கேட்கலாமா? எவனை மார்புறத்தழுவி ஆநந்தக் கண்ணீர் ததும்பிப் பெருகும்பொழுது, பிராணேசுவரா; துக்கம் அநுபவித்த அடியாளின் பாக்கியமே, நெடு நாள் காதலிக்கப்பட்டவனே என்று இவ்வாறு விளிப்பதற்கு வாயினின்றும் வார்த்தைகள் தன்னியல்பாய்ப் புறப்படுமோ, அப்படிப்பட்டவனைப் பார்த்து அந்தத் தரித்திர இராதாராணியின் பேச்சுக்களாற் பயனென்ன? நீவந்த சங்கதியைச் சொல் என்று பரிஹாசஞ் செய்தாளன்றோ? இப்படியு முண்டா? உங்களில் ரஸிகர்களான ஸ்திரீக ளிருக்கின்றார்கள், புருஷர்களு மிருக்கின்றார்க ளல்லரா? நீங்களேசொல்லுங்கள் கேட்போம். கன்னிகையான இராதாராணி இந்தச் சந்தர்ப்பத்தில் எவ்வாறு பேசியிருக்கவேண்டி யிருந்தது! செல்லுங்கள் கேட்போம்.

இராதாராணி மனத்திற் பரிதாபமடைந்தது ஏனெனில், அவள் கேட்ட கேள்வியினால், ஆக்ஷேபம் செய்தது போலாயிற்றென்று பரிதாபப் பட்டாள். ருக்மிணீகுமாரன், சிறிது யோசனையற்றவனாய், அதே சொல்லுகின்றேன். நான் அந்த இராதாராணியை அறிந்தவன். அந்த இராணியைப்பற்றி ஞாபகத்துக்குவந்தது. அந்தகாரமயமான இராத்திரியிற் சந்திரனைப் பார்த்ததுபோல் இந்த இராதாராணியே அந்த என்து இராதாராணியாய் இருப்பாளோ என்று சிறிது ஆசையுண்டாயிற் றென்றான். அதற்குள் இராதாராணி "தங்கள் ராணி!" என்று கூறியது கூறலாய்ச் சொல்லிக் கேலிசெய்து நகைத்தாள். என்ன! நகையாமல் என்ன செய்யவேண்டும்? நீங்கள் நம் இராதாராணியை நிந்திக்க வேண்டாம். திட்டுதல் உங்களுக்கெல்லாம் சாமானியமானது. அஃது உங்களுக்குச் சுபாவம். ஆனால் நீங்கள் நம் இராதாராணியைத் திட்டிக்கொண்டே இருக்கவேண்டாம். ருக்மிணீ குமாரன் தனக்குள் "நீயே அவளன்றோ; என்னுடையவளன்றோ?' என்றெண்ணிக்கொண்டு வெளிப்படையாய் ஆம்; என் இராதாராணி; நான் அவளை ஒருநாளிராத்திரி மாத்திரம் பார்த்து—பார்த்தேனென்று எப்படிச் சொல்வேன். இவ்வெட்டு வருஷங்களிலும் மறக்கவில்லை. என் இராதாராணியே ஆவாள்" என்று சொன்னான்.

இராதாராணி—"ஆகட்டும்; தங்கள் இராதாராணியாயேயிருப்பாள்" என்றாள். ருக்மிணீ குமாரன் மீண்டும் சொல்லலுற்றான்: அந்த ஆசையை வைத்துக்கொண்டு காமாக்கியினது மூத்த குமாரனைபார்த்து 'இராதாராணி என்பவள் யார்' என விசாரித்தேன். அவன் எல்லா சங்கதிகளும் விவரமாய்ச் சொல்வதற்கு மனமில்லாதவன் போற் சாதாரணமாய் எங்களுக்கு சம்பந்தப்பட்டவர் குமாரத்தி என்று சொன்னான். அவனுக்குப் பூர்த்தியாய்ச் சொல்ல இஷ்டமில்லையென்றறிந்து அவனுக்கு விசேஷமாய்த் தொந்தரவு கொடாமல் இராதாராணி ருக்மிணீ குமாரனைக் குறித்து விசாரிப்பதற்குக் காரணமென்னவென்று மாத்திரங்கேட்டு அப்படி அவசியமாயிருக்கும் பக்ஷத்தில் அந்த ருக்மிணீ குமாரனைப்பற்றி நான் சில சங்கதிகள் சொல்லக்கூடும் என்று சொன்னேன். இவ்வார்த்தையைக் கேட்டு அவன், அவள் ஏன் ருக்மிணீ குமாரனைப்பற்றித் தேடுகின்றாளோ அந்தசங்கதி எனக்கு நன்றாய்த்தெரியாது; எங்கள் தங்கைக்குத் தெரிந்திருக்கும்; எங்கள்தங்கைக்குக்கூட நன்றாய்த் தெரியுமோ என்னவோ? நீங்கள் இவ்விஷயத்தைப் பற்றிய சமாசாரத்தைப் பற்றிச் சொல்லக் கூடுமென்று எங்கள் தங்கையினிடம் சென்று சொல்லி வருகிறேனென்றுகூறி, எழுந்துபோய்ச் சிறிதுநேரத்திற்குள் மறுபடியும் திரும்பிவந்து, எங்கள் தங்கைகூட எல்லா சங்கதிகளையும் அவிழ்த்துச் சொல்லவில்லை, இக்காகிதம் கொடுத்து இதை நானேகொண்டுபோய்த் தங்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று சொன்னாளென்று சொல்லி இக்காகிதத்தைக் கொடுத்தான். நான் அந்தப்பிரகாரம் காகிதத்தைக் கொண்டுவந்து உன்னிடம் கொடுத்தேன்; நான் என்ன அபராதஞ் செய்தேனோ தெரியவில்லையென்று சொன்னான்.

இராதாராணி—அபராத மென்னவோ செய்தீர், அதனைக் கடைசியிற் சொல்லுகிறேன்; இப்பொழுது இவ்வளவு மாத்திரம் சொல்லக் கூடும்: என்ன வென்றால், தாங்கள் என்னவோ மிகவும் பிரமைப் பட்டு இங்கே வந்திருக்கிறீர்கள். தங்கள் இராதாராணி யாரோ அது தெரியவில்லை. அந்த இராதாராணியின் விருத்தாந்த மெல்லாம் கேட்கும் பொழுது, இது போன்றதுதான் என்று சொன்னாலும் சொல்லலாம். ஆனால் உறுதியாய்ச் சொல்ல முடியாது என்றாள். ருக்மிணீ குமாரன் அந்த ரதோற்சவத்தில் நடந்த விருத்தாந்தமெல்லாம் விவரமாய்ச் சொன்னான். ஆனால் தான் அவளுக்குக்கொடுத்த ரூபாய்கள் முதலிய சங்கதிகளைச் சொல்லவில்லை. இராதாராணி—இதனாலேயே தாங்கள், ஏதோ அபராதம் செய்தவராக ஏற்பட்டது; அதைத்தான் யோசித்துக்கொண்டிருந்தேன். ஆனால், பிரத்தியக்ஷமாய்ச் சொல்வதெப்படி? இவ்வளவுக்கும் அவளைப்பற்றிச் சொல்வதற்கு மனம் வரவில்லை. ஏனென்றால் தாங்கள் தயாளுவென்று தென்படவில்லை. தாங்கள் அப்படி யதார்த்த இருதயராயிருந்த பக்ஷத்தில் அவ்வித துர்த்தசையிலிருந்த அவ்வேழைப் பிச்சைக்காரப் பெண்ணுக்கு ஏதாவது சகாயம் செய்திருப்பீர்கள். அவ்வித சகாயம் செய்த சங்கதியே சொல்லவில்லை. அதென்ன நிச்சயமன்றோ? ருக்மணீ குமாரன்—அவ்வளவு விசேஷமான சகாயம் செய்வதற்குக் கூடவில்லை. நான் அன்றைத்தினம் ரதோற்சவத்தைப் பார்ப்பதற்குப் படவின்மேல் வந்திருந்தேன். ஒருவருக்கும் தெரியாமல் இருக்கவேண்டுமென்று சாதாரண வஸ்திரங்கள் தரியாமல் வேறு வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, யாராயினும் கேட்டால் ருக்மிணீ குமாரனென்று மாறு பெயர் சொல்லிக்கொண்டு வந்திருப்பேன். நல்ல நடுப்பகலுக்குமேற் பெருமழை வந்ததன்பேரிற் படவிலிருப்பதற்குச்சரிப்படாமற் படவைவிட்டுத் தனிமையாய் ஆற்றங்கரையின் மீது வந்

திருந்தேன். என்னிடம் சிறிது பொருளிருந்ததை இராதாராணிக்குக் கொடுத்தேன். அதுமிகவும் கொஞ்சம். மறுதினம் காலையிலேயே மறபடியும் வந்து அவள் விருத்தாந்த மெல்லாம் விசாரித்துக் கொள்ளலாமென்று யோசித்திருந்தேன். ஆனல் அந்த ராத்திரியே என் தந்தைக்கு உடம்பு அசௌக்கியமா யிருக்கிறதென்று செய்தி தெரிந்ததனல் அப்பொழுதே காசிக்குப் புறப்பட்டுப் போனேன். என் பிதா அதிக தினங்கள் படுத்தபடுக்கையா யிருந்தபடியாற் காசியிலிருந்து புறப்பட்டு வருவதற்கு வருஷத்துக்குமேல் ஆய்விட்டது. ஒரு வருஷத்துக்குப் பிற்பாடு நான் மறுபடியும் அந்தக் குடிசை யண்டைவந்து பார்த்தேன். அங்கே அது காணப்படவில்லை.

இராதாராணி—பார்த்தால் அந்த இராதாராணியின்மேல் தங்களுக்கு அன்பும் விசுவாசமும் அதிகமாயிருப்பதாகத் தென்படுகின்றது. அதற்குக் காரணமென்னவோ கேட்பதற்கு ஆசையாயிருக்கிறது.ஸ்திரீகளுக்கு இப்படிப் பட்டதையெல்லாம் கேட்டுத்தெரிந்து கொள்வதற்கு மிகவும் ஆசை. அவ் வாசைக்கு உட்பட்டு ஓர் அம்சம் கேட்கிறேன். கோபிக்கக்கூடாது, அந்த உற்சவத்தன்று மழை வந்ததன்றோ ? நிற்பதற்கு இடமில்லாமல் அந்தக்குடிசைக்குப் போயிருக்க வேண்டுமென்பது தோன்றுகிறது. அந்தக் குடிசையில் எத்தனை நாழிகை இருந்தீர்கள்? ருக்மணீ குமாரன்—வெகுநேரம் நின்றிருக்கவில்லை. நான் இராதாராணியின் கையிற் கொடுத்ததைப் பார்ப்பதற்காக அவள் விளக்கேற்றப்போனுள். அப்பொழுது அவளுக்கு ஒரு ஜதை சேலை வாங்கும் பொருட்டுப்புறப்பட்டுப்போனேன். இராதாராணி—மற்றேதாயினும் கொடுத்து வந்தீர்களா என்ன? ருக்மணீ குமாரன்—வேறென்ன கொடுக்கப்போகிறேன்? ஒரு சிறிய நோட்டிருந்தது. அதை யந்தச் குடிசையிலேயே வைத்துவிட்டு வந்தேன்.

இராதாராணி—'கொஞ்சம் வேலையிருக்கிறது. இதோ வந்துவிட்டேன் ; ஒரு க்ஷணம் தயவு பண்ணுங்கள்' என்று சொல்லிவிட்டு எழுந்து உள்ளே போனுள். அவள் அந்த நோட்டைக் காப்பாற்றி வைத்திருந்தாள். அதை யெடுத்துக்கொண்டுவந்து மறபடியும் சொல்ல ஆரம்பித்தாள்.

தாங்கள் அவ்வாறு நோட்டை வைத்துவிட்டுப் புறப்பட்டுப்போனது சரியான யோசனையாய்த் தோன்றவில்லை. அந்தக் குடிசையிலுள்ளவர்கள் நோட்டு அகப்பட்டபிறகு யாரோ இழந்துபோய் விட்டார்கள் என்று எண்ணமாட்டார்களா ? ருக்மணீ குமாரன்— இல்லை இல்லை; அதற்கிடமில்லை. பென்சிலால் அதன் பின்பக்கம் 'இராதாராணிக்காக'என்றெழுதி அதன்கீழ்ருக்மணீ குமாரராயன் என்று கையொப்பமிட்டேன். அதைப்பற்றியே இராதாராணி ருக்மணீ குமாரனைத் தேடிக்கொண்டிருக்கலாமென்று நம்பி அந்த விளம்பரத்தை வாங்கிவைத்துக் கொண்டேன். இராதாராணி—அதற்காகத்தான், தாங்கள் பெரிய தப்பிதம் செய்ததாக முன்னே சொன்னேன். தங்கள் திருவடித் தரிசனத்துக்காக அவள் அவ்வளவு ஆவலுடனிருந்தும் தாங்கள் இத்தனை வருஷங்களாயும் தரிசனம் கொடுக்கவில்லை. அந்த இராதாராணி அந்த ருக்மணீ குமாரனைத் தேடிக்கொண்டிருந்தாளா இல்லையா ? இதைப் பாருங்கள். இப்படிச்சொல்லி இராதாராணி அந்த நோட்டை ருக்மணீ குமாரன் கையிற் கொடுத்துச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து ' மகாப்பிரபோ ! தாங்கள் அன்று எனக்குப் பிராணதானம் செய்தீர்கள். இப்பூமியில் தாங்களே எனக்குச் சுவாமி'யென்று வினயமாய் விண்ணப்பம் செய்தாள்.

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்.

## REVIEWS OF BOOKS.
## புத்தகக் குறிப்புக்கள்.

**வானர மதுரைத் தலபுராண வசனம் :—**

[இது சென்னை ஸ்டார் ஆவ் இந்தியா அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. இதன் விலை அணா-2.]

இந்நூல் மானாமதுரையென்று வழங்கப்படும் வானர மதுரை டிஸ்ட்ரிக்டு முனிசீபாகிய ம-ா-ா-ஸ்ரீ வ. த. **சுப்பிரமணியப்பிள்ளையவர்**களால்இயற்றப் பட்டது. 41 - பக்கங்களடங்கியது ; வடநூற் புராணத்தையே பெரும்பாலுந் தழுவி யெழுதப்பட்டுளது ; ஆடவர் பெண்டிர் முதலிய யாவரும் படித்துக் களிகூருமாறு எளிய நடையினியன்றுளது; இதன் முன்னர்ப் பதின் மூன்று பாயிரச் செய்யுட்களுள ; இரு நான்கு அத்தியாயங்கள் கொண்டன; பத்திச் சுவை மிக்கொழுகுவது. இவ்வூர்த் தமிழ்ச் செய்யுட் புராணம் அச்சிடப்பெறாமையானும், மேலும் அது பண்டிதர்க்கே பயன்படுமாதலானும் இதனை வசன நூலாக வியற்றியது நேரிதே. நூலினிறுதியில் அநுபந்தமாகக் கிரந்த வெழுத்திற் பத்திரசம் நிரம்பிய வடமொழிச் சுலோகங்கள் சில அச்சிடப்பட்டுள. இவைமிக்க இனிமை வாய்ந்தவை. அத்தியாயங்களிற் புராணவரலாறும், சந்திரன் பாண்டியன் ஸ்ரீராமர் மாணிக்கவாசகர் இவர்கள் பூஜித்துப் பேறடைந்தமையும், விபூதிமகிமை சிவபுண்ணிய மகிமை வைகைநதி மகிமையுமாகிய இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இச்சிறு நூலை யாவரும் வாங்கிப்படித்து அகமகிழ்வாரென நம்புகின்றோம்.

**விக்டோரியா மகாராணியவர்கள் ஞாபகச்சின்னம் :**

[இது சென்னை [illegible]டிபிரெஸில் அச்சிடப்பட்டது ; இதன் விலை, கவர் கட்டடம் 0-8-0, வி. பி. பி. மூலமாய் 0-12-0 புத்தகம் வேண்டுவோர்: -பி. எம். சாமிசெட்டியார், 30, சவரிமுத்து வீதி, சென்னப்பட்டணம்—என்றெழுதவும்.]

இஃது, தற்போது நமது சக்கரவர்த்தியாக விளங்குபவர், 1875-76-ஆம் வருடத்திற் பிரின்ஸ் ஆவ் வேல்ஸ் என்னும் பட்டப் பெயருடன் இந்தியாவிற்கு வந்தபோது அந்த ராஜப் பிரபுவுக்குப் பிரஜைகள் புரிந்த சிறப்பனைத்தும் அடங்கிய 'இராஜதூதன்'என்னும் புத்தகத்தின் அதிபராகிய ம-ா-ா-ஸ்ரீ **பி. எம். சாமிசெட்டியா**ரால் தொகுக்கப்பட்டது, 104-பக்கங்கள் கொண்டது. இந்நூல்மிகவுந் தெளிவான தமிழ் நடையில் எழுதப்பட்டுளது ; வாசிப்போர் எளிதில் அறிந்துகொள்ளக்கூடியது. இந்நூலின் பிற்பாகம், மகாராணியவர்கள் தேகவியோகத்தைக் குறித்து வர்த்தமானப்பத்திரிகைகளி லெழுதிய குறிப்புக்களும் பல வித்வான்க ளெழுதிய சரமகவிகளும் அடங்கியுள்ளது.

## EDITORIAL NOTES.
## பத்திராதிபர் குறிப்புக்கள்.

**வளர்ச்சியின் வாய்மொழி :**—இப்பொருள்படத் தக்கதோர் ஆங்கிலத் தலைப்பெயர்கொண்ட மாதாந்தப்பத்திரிகை யொன்று சென்னை இந்துஜன

சமூகச் சீர்திருத்த சபையாரால் பிரசுரிக்கப்பட்டு வெளியாகின்றது. இதற்கு முன்னர் இந்துஜன சமூகச் சீர்திருத்தக்காரன் என்றதோர் ஆங்கிலப்பத்திரிகையை இவர்கள் வாரந்தோறும் அச்சிட்டு வெளிப்படுத்திக்கொண்டிருந்தனர்; அஃது இப்பொழுது மும்பாபுரியில் நடைபெறுகின்றது; ஆகவே நமக்கெனவொருபத்திரிகை யில்லாக் குறையைப்பற்றி யோசித்து மேற்கூறிய சபையார் 'வளர்ச்சியின் வாய்மொழி' யென்றதோர் புதியபத்திரிகை தொடங்கினர் போலும். இது சென்ற அக்டோபர்மாதம் முதல் ஆரம்பித்து நடக்கின்றது. இப்பத்திரிகையின் மூன்றுமாதச் சஞ்சிகைகள் கண்ணுறப்பெற்றோம். அவைகளில் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, என்ற முப்பாஷைகளிலும் விஷயங்களெழுதப்பட்டிருந்தன. இத்தகைய திரிபாஷாபத்திரிகையினாற் பெரும்பயன் விளையவுங்கூடும். விஷயங்களெல்லாம் நல்லனவே. இப்பத்திரிகை நீடூழி நமது நாட்டின்கணுலவி விளங்குவதாக.

**சென்னைச் சந்தை**:—சில வருஷங்களாக நடைப்பட்டிருந்த இச்சந்தை சென்ற டிசம்பர்மீ 26, 27, 28, 30, இந்தத் தேதிகளிற் பீபில்ஸ்பார்க்கிற் கூடிற்று. முன்னொருவிசை சம்பவித்த தீவிபத்தின் பயங்கரக்காட்சி இன்னும் ஒவ்வொருவர் மனத்துங் குடிகொண்டிருந்தமையால், அவ்வித ஆபத்து இப்போது மீண்டும் நேராவண்ணம் வேண்டிய முயற்சிகள் முனிசிபாலிடியாரால் எடுத்துக்கொள்ளப்பட்டன. தீயவிக்கும் யந்திரங்கள் எண்டிசையிலுந் தயாராயிருந்தன. மின்சார விளக்குகள் எங்கும் பிரகாசித்தன. ஓலைப்பந்தலால் முழுவதும் மூடியடைத்து விடாமல், பெரும்பாகம் வெளியாக விடப்பட்டிருந்தது. ஆபத்து நேரினும் தப்பியோடலாமெனும் எண்ணம் நிகழவே, ஆடவரும் மகளிரும் அச்சமின்றி ஆயிரக்கணக்காய் வந்துபார்க்கத் தலைப்பட்டனர். மத்திய பாகத்தில் வாத்தியம் வாசிக்க இடம் அமைக்கப்பட்டிருந்தது. இதனைச் சுற்றி ஓரகன்ற வீதியும், அதற்குப்பக்கத்தில் ஆங்காங்குப் பல கடைகளுமிருந்தன. சென்னையிலுள்ள பெரிய கடைகளில் அனேகம் ஈண்டுக்காணப்பட்டன. இவற்றிற்குக் கிழக்கிற் கோலாட்டக் கொட்டகையும், தென்கிழக்கிற் பந்தயஸ்தானமும், தென்மேற்கில் வேறொரு பெருங் கொட்டகையும், மேற்கில் உத்தியோகஸ்தர் வசிப்பதற்கு இடமும் அமைக்கப்பட்டிருந்தன. தென்மேற்கிலிருந்த கொட்டகையில், சில ஐரோப்பியர்கள் தங்கள் பாதங்களிற் சிறு சக்கரங்களைக் கட்டிக்கொண்டு, அவற்றோடு வழுவழுப்பான சறுக்குப் பலகைகளின்மீது நடந்தும் ஓடியும் விதவிதமாய் நடித்துத் தங்கள் சாமர்த்தியத்தைக் காட்டினார்கள். தென் கிழக்கிலிருந்த பந்தயஸ்தானத்தில் ஏறுகுதிரைப் பந்தயம், குதிரைவண்டி, மாட்டுவண்டி, துவி சக்கரவண்டி, ரிக்ஷாவண்டி முதலிய வண்டிப்பந்தயம், மனிதர்களின் ஓட்டப்பந்தயம், மல்லயுத்தப் பந்தயம் முதலிய பலவேறு விதமான பந்தய நிகழ்ச்சிகளால் மாலைக்காலங்கள் மிகவேடிக்கையாகக் கழிந்தன. இவைகளில் வெற்றிபெற்றோர்க்கு ஒன்றுமுதல் நூறுரூபாய் வரை தரத்துக்குத்தக்கபடி பரிசளிக்கப்பட்டது. இரண்டாவது தினத்தில் நாய்க்காட்சி நிகழ்ந்தது. உயரத்தில மிகப் பெரியதும் மிகச் சிறியதுமான நாய்களும், மிகவும் அழகிய நாய்களும், வெவ்வேறு வகை ஜாதி நாய்களும் காண்பிக்கப்பட்டன. இவற்றுடன் பார்வைக்கு மிகவும் விகாரமான நாய்களும் கொண்டுவரப்பட்டன. இவற்றிற்கெல்லாம் ஒன்று முதல் 15 ரூபா வரை பரிசளிக்கப்பட்டது. நான்காம் நாள் பந்தய மைதானத்தில் பாணவேடிக்கை நிகழ்ந்தது. கனம் பொருந்திய கவர்னரவர்களும் இச்சந்தைக்கு விஜயம் செய்து கௌரவப்படுத்தினார்கள். பாரிஸ்

முதலிய விடங்களில் நிகழும் அற்புதக்காட்சிகளைக் கண்டு களிகூரப் பிராப்தியற்ற நம்மனோர்க்கு இச்சென்னைச் சந்தைக்காட்சி, காணத்தக்க பெருங்காட்சியே யன்றோ? இஃது ஒவ்வொரு வருஷமும் நடக்குமென்று நம்புகின்றோம்.

**அரசின்பயன்** :—குடிகளின் நன்மைக்கே அரசு உழைக்கவேண்டுமென்பது தற்காலத்து நாகரிக முள்ளார் பலருக்கும் ஒப்ப முடிந்ததோர் கொள்கை. இராஜ்ய நன்மைக்கே குடிகளுழைக்கவேண்டுமென்பது முந்தையோர் கொள்கை. இது நிற்க, ஒவ்வொருவனுடைய தன்வயத்திற்கும் வரம்பில்லை; ஆயினும் அது பிறருடைய சம்வயத்தால் வரம்புடையதாகும். இதனைப் பாதுகாக்கவேண்டியது அரசின் கடமைகளுளொன்று. மேற்கூறிய வரம்பைத் தவிர்த்துப் பிறிது வரம்பு ஏற்படுத்தவாதல் இத் தன்வயமுறையைப் பாதுகாத்தற்கு வேண்டிய பொருளுக்குமேல் அதிகமாக வரிப்பணந் தண்டவாதல் புகுதல் நியாயமில்லை. மக்களுள் ஒவ்வொருவரையும் பிறரெவரும் நலியாதவாறு பாதுகாத்தலும், வேற்றுநாட்டுப்பகைஞரினின்று பாதுகாத்தலுமே அரசின் தலைநின்ற கடமைகளாம் என்பர் இக்காலத்து அரசியலுணர்ந்த சிலர்.

**அடையாற்றுப் பிரசங்கம்** :—கனம்பொருந்திய அன்னிபெஸண்ட் அம்மையவர்களின் திவ்யப்பிரசங்கம் சென்ற மதியங் கடைநான்கு நாட்களிலும் இச்சென்னைபுரிக்கடுத்த அடையாற்றின்கண் வழக்கம்போல மிகச் சிறப்பாக நடந்தேறிற்று. பிரமஞான சபையின் அவயவிகள் பலரும் பல விடங்களிலிருந்து வந்து கூடியிருந்தார்கள். அன்றியும், அநேக ஆங்கில கனவான்களும் ஜமீந்தாரர்களும் இராஜாக்களும் ஆங்குவந்து குழுமியிருந்தனர். திடீரென்று கண்ட சுரத்தில் இந்த அம்மையவர்கள் உரிய காலத்திற் காசியினின்றும் சென்னை வந்து சேர்தல் இயலுமோ வென்னும் சந்தேகம் நிகழ்ந்தது. இப்பிரசங்கத்தைக் கேட்டுக் களிகூரப்பேரவாக் கொண்டிருந்த பல்லாயிர ஜனங்களும் அம்மையவர்களின் வரவைப் பேராவலுடனும் கவலையுடனும் எதிர் பார்ப்பாராயினர். இறைவனருளால் சுரம் ஒருவாறு தணியவும், அம்மையவர்கள் தம்முடைய தேக நலிவையும் சிரமத்தையும் பொருட்படுத்தாது சென்னை சேர்ந்து விட்டார்களென்னும் செய்தி யறியவே, கல்வியின் மணம் பெற்றார் பலரும் ஒருங்குதிரண்டு அன்றுகாலை, பொழுது புலருவதற்குமுன் அடையாறு சேர்ந்து அம்மண்டபத்தின் வாயிலில் அடையத் தலைப்பட்டனர். இவர்கள் மேல்விழுந்து உட்சென்றதை நினைக்கின், அவ்வாயிலை மோக்ஷவாயிலென்றே சொல்லலாம். எள்விழுவதற்கும் இடம்பெறாத அச்சபைக்குள், அம்மையவர்கள். 8 - மணிக்குப் பிரவேசித்தார்கள். கல்லாதவர்களன்றிக் கற்றவர்களாலேயே நிறைந்து ஆயிரக்கணக்காய்க் கூடிய இம்மண்டபத்தில் அவர்கள் நிற்கவும் இடமின்றிக், கடலொலியோ, மேகமுழக்கமோ என்று ஓசையுண்டா யாரவாரத்துடனிருந்த இச்சபையானது, அம்மையவர்கள் பிரவேசமானதும், உடனே நிசப்தமாய் மாறியதை என்னென்று சொல்லலாம்! அம்மையவாகள் மேடைமீதேறி வாய்திறந்ததும், ஆங்குள்ளார் இமையா நாட்டம் பெற்றனர்; அவர்களது கருத்தும் மனமும் ஒருவழிப்பட்டு அம்மையவர்கள் பிரசங்கமாரியில் ஈடுபட்டன; ஒவ்வொருவரும், பயபக்தி விசுவாசத்துடனும், அன்புடனும், ஆர்வத்துடனும், அம்மையவர்கள் நாவாரக் கூறியதைக் காதாரக்கேட்டு மனமாரமகிழ்ந்து ஆநந்த பரவசராயி

னர். முதல்நாள் மகம்மதிய மதத்தைப் பற்றிய பிரசங்கம் நடந்தது. ஏனைய மூன்று நாட்களிலும் ஜைனமதம் சிக்கியமதம், பிரமஞானம் என்னும் விஷயங்களைப்பற்றி நடந்தன. இந்தப் பிரசங்கங்களின் சாராம்சத்தை இங்கே இரண்டொருவரிகளிற் கூறிவிடுதல் முடியாது. ஆயினும், இந்த அம்மையவர்கள் பிரசங்கங்களில் நாம் பொதுவாய்க் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. ஒவ்வொருமதத்துக்குமுள்ள கோட்பாடுகளும் அவைகளுக்குக் காரணங்களும் இவையெனவும், அவைகளை யனுஷ்டிப்பதனாலுள்ள நன்மைகளின்னின்னவென்றும், இவைகளை நம்பிக்கையுடனும் பக்தி விசுவாசத்துடனும் நாம் ஆராயவேண்டு மென்றும், அங்ஙன மாராயாது நந்தேயத்துள்ள மதாசாரங்களையும் தெய்வங்களையும் பழித்துக் கூறுதல் அறிவுடைமையன் றென்றும், உலகனைத்துக்கும் கடவுள் ஒருவரே யென்றும், அக்கடவுள் ஒருவரையே நந்தேயத்துள்ள பல மதங்களும் நாடுகின்றன வென்றும், ஆனால் ஒரே விதத்தில் நாடாமல் வெவ்வேறு மதங்களும் வெவ்வேறு விதங்களில் நாடுகின்றன வென்றும், அந்த வேறுபாட்டால் நாம் மருளப்படா தென்றும் கூறினார்கள். ஏனெனில், சென்னைபுரிக்கு வரவேண்டுமானால், கல்கத்தாவிலுள்ளவர்கள் தெற்கு நோக்கியும், இலங்கையி லுள்ளவர்கள் வடக்கு நோக்கியும், பம்பாயிலுள்ளவர்கள் கிழக்கு நோக்கியும் செல்லவேண்டி யிருக்கிறதென்றும் ஆனால் இவர்கள் யாவரும் சேருவது சென்னைபுரியே யென்றும், வெவ்வேறு திசையாய்ச் சென்றார்களே யென்று நாம் கலங்கவேண்டியது அவசியமில்லை யென்றும், அதுபோலவே கடவுளும் கேந்திரமாகிய ஓரிடத்திலுள்ளா ரென்றும், அவரைச் சுற்றிலும் அவரை நாடிப்போகும் வழிகள்தாம் அநேக மதங்களாக விருக்கின்றன வென்றும், ஆகையால் எந்த மதமாயினுஞ்சரி, அதனைப் பயபக்தி விசுவாசத்துடன் பின்பற்றுவோமானால், அது நம்மை அவரிடம் கொண்டு செலுத்துவது ஒருதலையென்றும், ஆனால் நம்பிக்கையும் அன்பும் முக்கிய மென்றும், கடல்மடை விண்டாற்போல மொழிந்தார்கள். ஆ! ஆ! என்னே இந்த அம்மையின் அறிவு! என்னே இவர்களின் பரந்தஞானம்! நந்தேயத்திலே பிறந்து நந்தேயத்திலே வளர்ந்து நம்முடைய மதங்களையும் ஆசாரங்களையும் கோட்பாடுகளையும் தெய்வங்களையும்பழித்தும் இழித்தும் நாக்கடிப்பாகவும் வாய்ப்பறையாகவுங் கூறிச் செருக்கித்திரியும் நம்மவர்கள் இந்த அம்மையவர்களின் அமுத வாக்கைக் கேட்டேனும் நல்வழிப்பட்டுய்யார்களா? கருணாநிதியாகிய கடவுள் இந்த அம்மையவர்களுக்கு நோயற்ற நீண்ட வாழ்வை யனுக்கிரகித்துக் காப்பாராக.

**பிரதமகலா பரீட்சை** :—சென்ற 1901-ஆம் வருஷத்தில் நமது சென்னைச் சர்வகலாசாலைப் பிரதம கலா பரீட்சைக்குச் சென்றவர் தொகை 1923 ஆம்; அவர்களில் தேறினவர் தொகை 695 ஆம். இனி, நமது சென்னை மாநகரினின்றும் பரீட்சைக்குச் சென்றவர் தொகை 507 ஆம்; அவர்களுள் தேறினவர் தொகை 172 ஆம்.

**பஞ்சம்** :—இந்தியா முழுவதிலும் பஞ்சக்கொடுமையால் வருந்தித் துரைத்தனத்தாரால் உதவி பெற்று வருவோர் தொகை 181,600 ஆம். சென்ற வாரத்தில் மட்டிலே 23,500 பேர் அதிகமாய் வந்திருக்கின்றனர். இவர்களில் 107,000 பேர் பம்பாய் சிந்தினின்றும், 34,000 பேர் பரோடாவினின்றும், 23,000 பேர் இராஜபுதன சமஸ்த ராச்சியங்களினின்றும், வந்தார்களாம். நாடெங்கணும் மழை பெய்தலின்றி வருந்துவது படிப்படியாய் மிகுந்துவருகிற தென்பது பலரும் அறிந்த விஷயம்.

**குரங்குகளுக்குட் பாஷை வழக்கு** :—சின்னாண் முன்னர் இங்கிலாந்திலுள்ள லிவர்ப்பூல் நகரத்திலுள்ள கார்னர் என்ற கலைவலாளரொருவர் தாஞ்செய்ததோர் பிரசங்கத்திற் குரங்குகளும் நம்மைப்போல ஒரு பாஷையைப் பேசுகின்றனவென்று சித்தாந்தப்படுத்தினராம். அவர் தாம் முதன் முதலிற் சிகாகோ நகரத்திலுள்ள மிருகசாலைக் குரங்குகளை மூன்று நான்கு ஆண்டுகளாய்க் கவனித்ததில், அவை தமக்குள் ஏதோ ஒருவகையாய்ப் பேசிக்கொள்ளுகின்றனவெனக்கண்டு சப்தக்கிரகண யந்திரத்தால் அவை பேசியதைப் பிடித்து வைத்துக்கொண்டனர். பின்னர் அவர் நியூயார்க்கு நகரஞ்சென்று அங்கே ஒரு குரங்கினெதிரில் மேற்கூறிய யந்திரத்தின் சாவியை முறுக்குதலும், அதினின்றும் வெளிப்பட்ட சப்தங்களைக் கேட்ட அக்குரங்கு விடை கூறுவதுபோற் சில பேசிற்று. அவற்றையும் அவ்யந்திரத்திற் பிடித்துக்கொண்டு அவர் அமெரிக்கா கண்ட முழுதுஞ் சுற்றிப் பல குரங்குகளைக் கண்டனராம். அதன்மேற் காட்டிலேயே போய் வாலில்லாப்பெருங் குரங்குகளைப் பார்த்துச் சோதிக்கவேண்டுமெண்ணந் தோன்றுதலும், அவர் ஆப்பிரிக்கா கண்டத்தில் அத்தகைய குரங்குகள் அடர்ந்திருக்கும் நிசாமியென்னும் ஏரிக்கருகில் தங்கி ஒரு கூண்டு செய்து கொண்டு அதில் வசித்தனராம். சாதாரணமாய்க் காட்டு மனிதனெனப்படும் அக்குரங்குகள் மிக்க சங்கோசமும் பேச்சு விருப்பின்மையுங் காட்டியதனால் தமக்கு அதிகமாய் அறிந்து கொள்ள இயலாவிட்டாலும் மேற் கூறிய சித்தாந்தத்தை வலியுறுத்துவதற்குப் போதிய ஆதாரங்கள் கிடைத்தனவாம். எனினும் அக்குரங்குகளுளொன்றைத் தம்மோடு கொணர்ந்து நிறுத்தி யாவர் முன்னும் பேச விடுங்காறும் தாம் இது விஷயமாய்ச் சோதித்தறியுமாறு தீர்மானித்திருப்பதாகக் கூறியிருக்கின்றனராம். அவருடைய எண்ணம் கைகூடிற்றெனில் அது மிகவும் ஆச்சரியமான தொன்றன்றோ?

**புதுக்கோட்டை யிராஜாங்கம்** :—இம்மதி 15-ஆந்தேதி வெளிப்பட்ட புதுக்கோட்டை யிராஜாங்கக் கஜெட்டில் ஒரு விஷயங்கண்டு களிகூர்கின்றோம். 'அரசரவர்கள் தம் நாட்டிலுள்ளார் யாவரும் இராஜ்ய காரியங்களிற் பொது நன்மையை யொட்டிய விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்ளும் பொருட்டு ஒவ்வொரு வருஷமும் பொங்கற் பண்டிகை கழிந்தபின் தலைநகரில் ஒரு கூட்டங் கூட்டுவார்கள். அக்கூட்டத்திற்குத் தம் நாட்டின்கணுள்ள முக்கியமான குடித்தனக்காரர் வியாபாரிகள் முதலாயினோர் தமக்குற்ற பிரதிநிதிகளை யனுப்பலாம். அங்ஙனம் அனுப்பப்படும் பிரதிநிதிகளின் முன்னிலையில் திவானவர்கள் கழிந்த வருஷத்தில் துரைத்தன சம்பந்தமாய் ஏற்பட்ட முக்கிய விஷயங்களைப் பற்றியும் அடுத்த வருஷத்திற்செய்யக்கருதி யிருக்குங் காரியங்களைப் பற்றியும் எடுத்துரைப்பார். அடுத்த பிப்ரவரியீ 7-ஆந் தேதியன்று இவ்வருஷத்துக் கூட்டங்கூடும்' என்ற விஷயத்தைக் கண்ணுற்ற யாவரே களிப்புறாதார்? இவ்வருஷக் கூட்டத்திற்காகத் திவானவர்கள் 30-பிரதி நிதிகள் தெரிந்தெடுத்திருக்கின்றனராம். இந்தக் கூட்டத்திற்கு வர விரும்பும் ஏனையோர் திவானவர்கட்குப் பத்து நாளைக்கு முன்னரே யெழுதிக் கேட்டு உத்தரவு பெற்றுக்கொள்ள வேண்டுமாம். நமது சுதேசராச்சியங்கள் செவ்வனே யாளப்படுவதில்லை யென்ற குறைபாடு தம்முடைய நாட்டைச்சாராத வண்ணம் நமது புதுக்கோட்டையரசரவர்கள் செய்யப் புகுந்திருக்கும் இவ்வேற்பாடு மிகவும் மெய்ச்சத்தக்

கதே. அவருடைய முயற்சிகள் நிறைவேறுமாறு கடவுளை வேண்டுகின்றோம்.

**காங்கிரேஸ் மகாசபை** :—இந்தியாவுக்குப் பற்பல நன்மைகளைப் புரிந்துவரும் காங்கிரெஸ் என்னும் இச்சபையானது சென்ற மதியத் திறுதி வாரத்தின், வியாழன் வெள்ளி, சனிக்கிழமைகளிற் கல்கத்தா நகரத்திற் பதினேழாமுறை கூடிற்று. **தீன்ஷா இடல்ஜிவாச்சா** என்னும் பாரசீக கனவான் சபா நாயகராய் வீற்றிருந்தார். சபையிற் கூடியிருந்தவர்களின் தொகை 5000-க்குமேல் இருக்கலாமென்று மதிக்கப்படுகிறது. சபா நாயகர் ஆரம்பத்தில், இந்தியர்களின்மீது அளவிறந்த அன்பு பூண்டு அரசாட்சி புரிந்துவந்த மகாராணியவர்கள் காலஞ்சென்ற விஷயத்தைப்பற்றி இந்தியாவிலுள்ள ஜனங்கள் யாவரும் ஆற்றொணாத் துயரத்தால் வருந்தா நிற்பதைத் தெரிவித்தனர். அதன்பின்னர், மகாராணியவர்களைப்போலவே நம்மீது அன்பு பாராட்டுவாரென்று எதிர்பார்க்கப்படுகிற **எட்வர்டு** மன்னருக்கும் **அலெக்ஸண்ட்ரா** சக்ரவர்த்தினிக்கும் சமீபத்தில் மகுடஞ்சூட்டவிருக்கும் தினத்தைச் சந்தோஷத்துடன் கொண்டாடுவதற்கு இந்தியாவிலுள்ளார் யாவரும் அவலுடன் எதிர்பார்த்திருப்பதாயும், அந்தச் சுபதினத்தில், முற்காலத்து இந்து ராஜாக்களின் வழக்கம்போல் நம் எட்வர்டு மன்னரும், குடிகள் என்றும் மறவா திருக்கும்படியான வேோர் நன்மையை யளிக்கக் கருணை புரிவாராயின் அது மிகவும் நலனுடைத்தென்றும் கூறினர். அதன் பின்னர், இந்தியாவில் தற்காலம் மிதமிஞ்சி வருந்திவரும் பஞ்சத்தைப்பற்றியும், இந்தியர்களுக்குள்ள ஏனைய குறைபாடுகளைப் பற்றியும், யாவரும் வியக்கத் தக்கவாறு ஒவ்வொன்று யெடுத்துப் பேசினர். காங்கிரெஸில் எடுத்துப் பேசப்பட்ட விஷயங்கள் யாவும் நமது துரைத்தனத்தாராற் கவனிக்கப்படுமென்று நம்புகிறோம். அடுத்த வருஷம் காங்கிரெஸ் பம்பாய் இராஜதானியிற்கூடும்.

**சென்னை உபாத்தியாயர் சங்கம்** :—1900-அம் வருஷத்திற் கூடாமலிருந்த இச்சங்கஞ் சென்ற மாதஞ் சென்னையிற் சிறுவர் கிறித்தவக் குழாத்தின் கட்டிடத்திற் கூடிற்று. முதன்மணி நமது தேசாதிபதியாகிய கனம் பொருந்திய **ஆம்தில்** சீமானவர்களும்பின்னர் இராசதானிக் கலாசாலை உயிர் நூற்புலவராகிய போர்ன துரையவர்களும் சபா நாயகராக வீற்றிருந்தனர். இதன்கண் தற்காலத்திற் கல்வி கற்பிக்கும் முறைமையிலுள்ள பெருங் குறைபாடுகள் சில நன்கெடுத்துக் காட்டப்பட்டன. **ஹால்** துரை படித்த வியாசத்தினின்றுங் கல்வி கற்பிக்கு மூறையைப் போதிக்கும் பள்ளிக் கூடங்களின் கீழ்ப்பாகங்களில் விருத்திக்கு இடமிகவுண்டென விளங்காநின்றது. அவற்றில் நடக்கும் வேலையை யின்னும் நன்முக விசாரணைசெய்தல் இன்றியமையாததே. ஹால்துரை சொன்ன மற்ற விஷயங்கள் உடனே நடவாவிடினும் இது நடக்குமென்று நம்புகின்றேம். மிஸ் கார் அம்மையவர்கள் இப்பொழுது பெண் பாடசாலைகளிற் படிப்பிக்கப்படுங் கல்வியினைப்பற்றிப் படித்த வியாசம் மிகவும் நன்முயிருந்தது. பஞ்சமர் கல்வியைப் பற்றிக் கௌடிதுரை படித்ததும் நன்முயிருந்ததெனச் சிலர் எண்ணுகிறார்கள். வேறு சிலர் எழுந்து பேசினவை இன்பகரமாகவேயிருந்தன. இக்கூட்டம் நிகழ்ந்ததிற் பல்லாற்றுனும் பயன் விளையலாமென்றே நினைக்கின்றேம். எவ்வாற்றுனும் பெண்கல்வியேனும் விருத்தியாகாவிடின் யாமனைவரும் மிகவும் விசனப்பட்டவராவே மென்பது திண்ணம்.

# Specimens of RUBBER STAMPS

MANUFACTURED BY THOMPSON & CO.,

*The City Rubber Stamp Makers, Broadway, Madras.*



No. 313—Rs. 2-8-0.




No. 303—Rs. 2-8-0.




No. 314—Rs. 2-8-0.




No. 309—Rs. 2-0-0.




No. 300—Rs. 3-0-0.




No. 304—Rs. 3-8-0.




No. 302—Rs. 2-0-0.




No. 306—Rs. 3-0-0.




Rs. 3-0-0.

ஒவ்வொரு டைரியிலும் நமது சக்கரவர்த்தியினுடைய உருவப் படம் மிக நேர்த்தியாய் அச்சிட்டு வைக்கப்பட்டிருக்கிறது.

தாம்ஸன் அண்டு கம்பெனியார்

# மினெர்வா டைரிகள்.

அடுத்துவரும் 1902ஷ்த்துக்கு அதி உபயோகமான சிறந்த விஷயங்களடங்கிய டைரிகள் விற்பனைக்குத் தயாராக விருக்கின்றன.

| | |
|---|---|
| நெ. 1. ஆறுவித பாஷைகளில் அச்சிடப்பட்ட மினெர்வா பாக்கெட் டைரி 3 அங்குல அகலமும் $4\frac{1}{2}$ அங்குல நீளமும் உள்ளது. | 0 4 0 |
| 2. ஷை ஷை மடிப்பு உள்ளதும் பென்சல் வைக்கப்பட்டதுமான பாக்கெட் டைரி | 0 6 0 |
| 3. அதிக உபயோகமுள்ளதும் அவசியமான விஷயங்களடங்கியதும் 8 - அங்குல நீளமும் 5 - அங்குல அகலமும் உள்ளது. | 0 12 0 |
| 3. ஷை பக்கங்களுக்கிடையில் பிளாட்டிங் பேபர் வைத்தது | 1 0 0 |
| 4. அதிக உபயோகமும் அவசியமுள்ளதுமான விஷயங்களுடையதும் 10 - அங்குல நீளமும் 8 - அங்குல அகலமுமுள்ளதும் பக்கங்களுக்கிடையில் பிளாட்டிங் பேபர் வைத்தது. | 1 2 0 |
| 5. பூல்ஸ்காப் கடித அளவில் அச்சிடப்பட்டு நேர்த்தியாய்ப் பயிண்டு செய்யப்பட்டதும் அதிக உபயோகமும் அவசியமுமான விஷயங்கள் அடங்கியதும் 13-அங்குல நீளமும் 8-அங்குல அகலமும் உள்ளதும் பக்கங்களுக்கிடையில் பிளாட்டிங் பேபர் வைத்தது. | 1 4 0 |

மேற்கண்ட டைரிகளில் 1-வது 2-வது நெம்பர் டைரிகள் இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு, துலுக்கு, மலையாளம், கன்னடம் இந்த ஆறுவித பாஷைகளில் தேதிகள் அச்சிட்டிருப்பதோடும் இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு பாஷைகளில் பஞ்சாங்கம், 12-மாதத்து ராசி சக்கரம், அமிர்தயோகம் யோகினிநிலை, மகர சங்கராந்தி, ஆலயதரிசனம், ஆபரணம் அணிதல், ஆருடத்திற்கு, ஆந்தைக்காதல், உபநயனத்திற்கு, உழவுசெய்ய, எதிர்கொள்ளுதலிவை நன்மை தீமை யறியும் பயன், கருட தரிசனம், இராகுகாலம், கரிநாள், காது குத்தும் நாள், கிருகப்பிரவேசம், கோடியுடுத்தல், சீமந்தம், க்ஷௌரம், திக்குத்தம்பல், தேதிமழை, நிஷேக முகூர்த்தம், பயணஞ்செய்யும் தினம், செய்யாத்தினம், பல்லிவிழும் பலன், கௌரி பஞ்சாங்கம், முதலியவைகளும் அச்சிடப்பட்டிருப்பதனால் இஃது எல்லோருக்கும் சிறந்த உபயோகத்தைக் கொடுக்கும். இதுவரை வெவ்வேறிடங்களில் அச்சிடப்பட்ட டைரிகளைக்காட்டிலும் நூதனமும், அதிக விசேஷமுமான விஷயங்களும் அடங்கியிருக்கின்றன.

வேண்டுவோர் அடியிற்கண்டவிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

தாம்ஸன் கம்பெனி,
33, பிராட்வே, சென்னை.

PRINTED AT THE "MINERVA" PRESS, BROADWAY, MADRAS.